


# MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Saturday, 26th August 1961.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half past eight of the clock, the Deputy Speaker (SRI B. BHAKTAVATSALU NAIDU) in the Chair.

## I. QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS

DEPUTY SPEAKER : Question Nos. 1401, 1405, 1406, 1407, 1408, 1409, 1410, 1413, 1416, 1417 and 1425 will be taken up on some other day as the Hon. the Minister for Finance is not in the House now.

*Bridge across Pappanganniar river*

*** 1377 *Q.*—SRI R. SRINIVASA IYER :** கனம் பொது மராமத்து அமைச்சர் தயது செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) முத்துப்பேட்டை-மிமிசல் சாலையில் (கிழக்குக் கரை சாலை) சரபேந்திரராசன்பட்டிணத்திற்கு அருகே பாப்பங்கன்னியாரின் குறுக்கே ஒரு பாலம் அல்லது ஊடு பாதையை அமைக்கும் உத்தேசம் ஏதேனும் உண்டா ?

(இ) இதற்கான மதிப்பீடுகளும், திட்டங்களும் தயாரிக்கப்பட்டனவா ?

(உ) இவ்வேலை எப்போது மேற்கொள்ளப்படும் ?

THE HON. SRI P. KAKKAN : (*a*), (*b*) & (*c*) Yes, Sir. The proposal to construct a minor bridge arcoss Pappanganniar river near Sarabendrarajan Patnam at Mile 16/3 of Muthupet-Mimisal Road forms part of the Scheme for developing East Coast Road as a National Highway during the Third Five-Year Plan. The Government of India have not yet approved the scheme. Only after the approval of Government of India is received, plans and estimates will be prepared and the work taken up for exectuion.

**SRI R. SRINIVASA IYER :** ஸார், இந்த ஈஸ்ட் கோஸ்ட் ரோடில் மனோவரா முக்கியமாக டூரிஸ்டுகள் போகிற இடமாக இருப்பதால், இதை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்ப்பதற்கு சிபார்சு செய்யப்பட்டும், இப்போது வந்துள்ள லேட்டஸ்ட் புத்தகத்தில் இந்த ரோடு முறை மூன்றாவது திட்டத்தில் சேர்க்கப்படவில்லை. ஆகவே, இந்தப் பாதையை ஸ்டேட் கவர்ன்மெண்ட் எடுத்துக்கொண்டு, அவர்கள் செலவிலே சில பைப் லைன்களாவது போட்டு, வண்டிகள், கார்கள் சுலபமாக செல்லக்கூடிய முறையிலே பாதையை அமைக்க முன்வருமா என்று கேட்க விரும்புகிறேன்.

**THE HON. SRI P. KAKKAN :** இது ஏற்கனவே சிபார்சு செய்து அனுப்பப்பட்ட திட்டம். 7½ லட்சம் ரூபாய் செலவில் செய்து கொடுப்பதற்கு ஏற்பாடு செய்திருக்கிறோம். அந்தத் திட்டம் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே சேர்த்து செய்ய மத்திய அரசாங்கத்தார் ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

[26th August 1961

SRI R. SRINIVASA IYER : ஸார், பாலம் கட்டுவதற்கு நாட்கள் ஆனாலும்கூட, வடக்கே போனால் அங்கே இருக்கக்கூடிய யமுனை, கங்கை போன்ற நதிகளின் டிரிபியூடரிகளுக்கு குறுக்கே கிராவல் போட்டு, அதற்கு மேல் தார் ரோடு போடப்பட்டிருக்கிறது. வெள்ளம் வந்தாலும் அந்த ரோடுகளின் மேல் வழிந்து போகக்கூடிய அளவிலே ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறது. இந்த ஆற்றில் ஒரு வருஷத்திலே இப்படி வெள்ளம் 10 நாட்களுக்குத்தான் போகும். ஆகவே அந்த மாதிரி ரோடு போடவாவது இப்போது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே சேர்க்கப்படாததால் மதராஸ் கவர்ன்மெண்ட் செலவிலே செய்வதற்கு முன்வருமா ? பின்னால் வேண்டுமானால் 7, 8 லட்சம் செலவிலே திட்டம் போட்டு மத்திய அரசாங்கம் செய்யட்டும். ஆகவே உடனடியாக இந்த ஏற்பாட்டைச் செய்ய இந்த அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI P. KAKKAN : "செய்வன திருந்தச் செய்" என்று சொல்வதுபோல், ஒரு காரியத்தைச் செய்வது என்றால், அதற்கு நல்ல முறையிலே திட்டமிட்டு மேற்கொள்ள வேண்டும். இந்த விஷயங்களிலே நாம் என்ஜினியர்கள் சொல்லக்கூடியவைகளையும் சிறிது கவனிக்க வேண்டும். ஆகவே அந்த முறையில் கவனிக்கப்பட்டு, இதற்கு ஏற்பாடு செய்யப்படும்.

### *Houses for Government Servants*

* 1378 *Q.*—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI V. SUBBIAH): கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ல் மவுண்ட்ரோடு கவர்ன்மெண்ட் எஸ்டேட்டில் சர்க்கார் சிப்பந்திகளுக்காக கட்டப்பட்ட வீடுகள் எத்தனை ?

(இ) அவைகளில் எத்தனை சர்க்கார் சிப்பந்திகளுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது ?

(உ) சர்க்கார் சிப்பந்திகள் அல்லாதவருக்கு வீடுகள் கொடுக்கப்பட்டிருக்கின்றனவா ?

(எ) அப்படியானால், காரணமென்ன ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Nil, Sir.

(*b*) to (*d*) Do not arise in view of the answer to Clause (*a*).

SRI K. VINAYAKAM : 1960-ல் கவர்ன்மெண்டு சர்வெண்டுகளுக்கு வீடு கட்டவில்லை என்று சொல்லப்படுகிறது. ஏற்கெனவே அங்கு கட்டப்பட்டுள்ள வீடுகள் கவர்ன்மெண்டு சர்வெண்டுகளுக்குத்தான் தரப்படுகிறதா ? அல்லது மற்றவர்களுக்கும் தரப்படுகிறதா ? அப்படி இருந்தால், அவர்கள் எண்ணிக்கை என்ன ?

THE HON. SRI P. KAKKAN : அவர்கள் எண்ணிக்கை இப்போது என்னிடத்தில் இல்லை. இந்த கவர்ன்மெண்டு எஸ்டேட்டிலே உள்ள வீடுகளை எல்லாம், 1, 2, 3, 4, 5, 6, 7, 8 என்று எட்டு வகைகளாகப் பிரித்திருக்கிறார்கள். சம்பளத்தைப் பார்த்து வீடுகள் பிரித்துக் கொடுக்கப்படுகிறது. எம்.எல்.ஏ-க்கள் தங்கியிருக்கிறார்கள். கெஜடெட் ஆபீசர்கள் குடியிருக்கிறார்கள். அதோடு கவர்ன்மெண்டு சர்வெண்டுகளுக்கும் ஒதுக்கப்படுகிறது. இந்த வீடுகள் ஒதுக்கப்படுவதற்கு வெயிட்டிங் லிஸ்டிலே உள்ளபடி கொடுக்கப்படுகிறது. அதேபோல் சில ஏழை டிசர்விங் கேஸ்களுக்கும் வீடுகள் ஒதுக்கப்படுகிறது. ஆனால் இப்போது சட்டசபை அங்கத்தினர்களுக்கு மட்டும்தான் வீடுகள் கட்ட திட்டமிடப்பட்டு இருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

SRI K. VINAYAKAM : சட்டசபை அங்கத்தினர்களுக்கு கட்டப்படுகிற வீடுகளைத் தவிர, இந்த கவர்ன்மெண்டு எஸ்டேட்டிலே நிறைய இடம் காலி இருக்கிற காரணத்தாலே, 4-வது வகுப்பைச் சேர்ந்த அரசாங்க உத்தியோகஸ்தர்களுக்காயினும் வீடுகள் கட்டி வசதி செய்துதர இந்த ஆண்டிலாவது அல்லது இந்த ஐந்தாண்டுத் திட்டத்திலாவது ஏதாவது ஏற்பாடு செய்யுமா ?

26th August 1961]

THE HON. SRI P. KAKKAN : எனக்குத் தெரிந்த மட்டிலும், அரசாங்க உத்தியோகஸ்தர்களுக்கு புதிதாக வீடுகள் கட்டுவதற்காக இந்த திட்டமில்லே. இப்போது அங்கு காலியாக உள்ள இடங்கள் பின்னால் தேவைப்படும். ஆகவே இப்போது சட்டசபை அங்கத்தினர்கள் மட்டும் அவரவர்கள் குடும்பத்தோடு தங்குவதற்கு, அவர்கள் ஹௌஸ் கமிட்டியிலே உதவி சபாநாயகர் தலைமையில் முடிவு செய்தபடி ஏற்பாடு செய்ய இருக்கிறோம். அது விஷயம் பரிசீலனை செய்யப்பட்டு, அவர்களுக்கு மட்டும் இடம் கொடுக்க முடிவு செய்யப்பட்டு இருக்கிறது.

*Misappropriation of money*

*1402 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) குடியாத்தம் தாலுகா, கீழ்பட்டி கிராமம் மணியக்காரர் பணம் கையாடல் விஷயமாக 1960-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 15-ம் தேதி கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்களுக்கு வி. கே. கோதண்டராமன், எம்.எல்.ஏ. அவர்கள் எழுதிய லெட்டர் சேர்ந்ததா ?

(இ) இது விஷயமாக எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) Yes, Sir.

(இ) The District Revenue Officer, North Arcot, has reported that the ex-headman of Kalpatti village, Gudiyattam taluk, North Arcot District, was ordered to be removed from service by the Sub-Collector, Tiruppattur, after a thorough examination of the case and that the action of the Sub-Collector, Tiruppattur is just and proper. He has also reported that the present acting headman of the village is not related to the ex-headman.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், சிறு சேமிப்பு நிதிக்காக வசூல் செய்த பணத்திலிருந்து 2,000 ரூபாய் கையாடல் செய்த குற்றத்திற்காக வேண்டி தண்டனை விதிக்கப்பட்டு, ஜெயிலில் இருந்து வந்த அந்த நபரை "டிஸ்மிஸ்ட் பிரம் சர்வீஸ்" என்று உத்தரவு போடுவதற்குப் பதிலாக "ரிமூவல் பிரம் சர்வீஸ்" என்று போட்டு, அந்தக் காரணத்தினாலே அவருடைய உடன்பிறந்த தம்பியை மீண்டும் அந்தப் பதவியிலே வைத்துக்கொண்டு, அங்கே இருக்கக்கூடிய கிராமத்திலே உள்ளவர்களுக்கு தொல்லே கொடுத்துக்கொண்டு இருப்பதற்குக் காரணம், இன்றைக்கு இருக்கக்கூடிய வெள்ளைக்காரன் செய்த ரெவின்யூ போர்டு ஸ்டாண்டிங் ஆர்டர்தான் என்பது கனம் அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா ? ஆகவே இதைத் திருத்தி, "ரிமூவல் பிரம் சர்வீஸ்" என்பதற்குப் பதில் "டிஸ்மிஸ்ட் பிரம் சர்வீஸ்" என்று உத்திரவு போடுவதற்கு கனம் அமைச்சர் அவர்கள் ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : நான் முன்னரே சொன்னேன். இப்போது வேலே செய்யக் கூடியவர் அவருடைய சொந்தக்காரர் அல்லவென்று. இரண்டாவது, ஒரு ஆளை வேலையிலிருந்து டிஸ்மிஸ் செய்வதா, ரிமூவல் செய்வதா என்பது டெக்னிகல் பாயிண்ட். இதையெல்லாம் அந்தந்த ஆபீசர்கள் தங்கள் டிஸ்கிரிஷனில் செய்வார்கள். ஆகவே அந்த அளவிலே இதைச் செய்திருக்கலாம். இன்னொன்று, அவர் பூராப் பணத்தையும் கட்டி விட்டார் அதனால் இப்படிச் செய்திருக்கலாம். வேறு ஒன்றுமில்லே.

SRI V. K. KOTHANDARAMAN : கனம் அமைச்சர் அவர்களுக்கு வந்திருக்கக்கூடிய பதில் ஒன்றிரண்டு மாதங்களுக்கு முன்னால் வந்திருக்கலாம். அந்த நேரத்தில் கனம் அமைச்சர் அவர்கள் சொல்லுவது போல அவருக்கு உறவினர் அல்லாதவர் இருந்திருக்கலாம். ஆனால்

அது இப்பொழுது உண்மை அல்ல. பத்து நாட்களுக்கு முன்னுல் அவருடைய தம்பி நியமிக்கப்பட்டிருக்கிருர் என்பது கனம் அமைச்சர் அவர்களுக்குத் தெரியாது என்று நினைக்கிறேன். ஆகவே, இந்த விஷயத்தில் நடவடிக்கை எடுக்கப்படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அந்த விஷயம் எனக்குத் தெரியாதது வாஸ்தவம்தான். நான் அதைப்பற்றி விசாரிக்கிறேன்.

*Flood banks (the Kannanar)*

* 1403 *Q.*—SRI R. SRINIVASA IYER (on behalf of SRI A. R. MARIMUTHU) : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

பட்டுக்கோட்டை, ஒரத்தநாடு தாலூக்காவிலுள்ள கண்ணனுறு வெள்ளத்தடுப்பு வேலைகள் எந்த நிலையிலுள்ளது ?

THE HON. SRI P. KAKKAN : Flood banks on the right side of Kannanar have already been formed in Periakottai village limits. Proposals for forming flood banks to Kannanar on the left side in Olayakunnam and Kanniakuruchi village limits are under active consideration.

SRI R. SRINIVASA IYER : இந்த கண்ணனுறு வடசேரியிலிருந்து பெரியகோட்டைக்குப் போய் சமுத்திரத்தில் விழுகிறது. இரண்டு ஸைடுகளிலும் ஜலம் மிதந்து வருஷத்தில் 1,000, 1,500 ஏக்கர் நிலத்திற்கு நஷ்ட மேற்படுகிறது. வடசேரியில் "கரை" எழுப்பப்பட்டிருக்கிறது. பெரியகோட்டையிலும் எழுப்பப்பட்டிருக்கிறது என்று சொல்லுகிருர்கள். வடசேரிக்கும் பெரியகோட்டைக்கும் நடுவில் இருக்கக்கூடிய இரு கரைகளும் என்ன கதி ஆகிறது. அதற்கு ஏதாகிலும் ஏற்பாடு இருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : என்னிடம் இருக்கிற தகவல்படி

The Superintending Engineer has submitted plans and estimates for Rs. 38,000 to Chief Engineer (Irrigation) for forming flood banks to Kannanar drain in Olayakunnam and Kanniakuruchi village limits on the right side. These are proposed to be taken up under special minor irrigation programme. The estimates are under examination of local officers. The Chief Engineer has stated that necessary action will be taken to implement this scheme after examination is completed.

இந்த ஏற்பாடு செய்திருக்கிருர்கள் என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஆனல், ஒரு இடத்தில் கட்டி, இன்னொரு இடத்தில் கட்டாவிட்டால் சேதம் ஏற்படும் என்று தெரியும். அதைப்பற்றி என்ஜினியரிடம் தகவல் சொல்லுகிறேன் என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

*Hospital Employees (Government General Hospital, Madras)*

* 1404 *Q.*—SRI S. PAKKIRISAMI PILLAI : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether it is a fact that the Engine Drivers, Electricians, Mortuary Attendants, Liftmen and Fitters working in the Government General Hospital, Madras, have not been given the revised pay scales from 1st June 1960 as recommended by the Madras Pay Commission ; and

(*b*) if so, the reason therefor?

26th August 1961]

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) The pay of the Mortuary Attendants, Electricians, Engine Drivers and Liftmen in the hospital has since been fixed in the revised scales of pay. The question of revising the scale of pay for the post of Fitters is under consideration.

SRI K. VINAYAKAM : What would be the financial commitment in the latter category for whose cause the attention of Government is being drawn?

THE HON. SRI M. A. MANICKAVELU : For two or three categories it has been already given. In the case of fitters, proposals have been called for and that is being looked into.

*Sathanur Reservoir*

* 1411 *Q.*—SRI S. M. ANNAMALAI : (on behalf of Sri P. U. SHANMUGAM) : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சாத்தனூர் நீர் தேக்கத்தில் கடைசியாக தண்ணீர் பாசனத்துக்காக திறந்துவிடப்பட்ட தேதி என்ன ? நிறுத்திய தேதி என்ன ?

(இ) சில எரிகளுக்கு தண்ணீர் போகவில்லை என்பது அரசாங்கத்துக்குத் தெரியுமா ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) The Sathanur Reservoir Project Canal was last thrown open for irrigation season of 1960-61 on 1st December 1960 and closed for supply on 10th May 1961.

(*b*) All the eleven tanks which are directly fed by the Sathanur Reservoir Project Canal waters were supplied with water during the period.

*Oorani poramboke lands (assignment of)*

* 1412 *Q.*—SRI P. K. MOOKIAH THEVAR (on behalf of SRI SOWDI S. SUNDARA BHARATHI) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Government have received a petition, dated 8th April 1961 objecting to the assigning of oorani poramboke land of Vethalappanaicker Oorani, bearing paimash No. 408 and survey No. 14/1 within Suthamadam limits, Mandapasalai firka, Aruppukottai taluk, Ramanathapuram district, from the villagers of Pungamarathupatti and seven other villagers; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes.

(*b*) As the objection petition was received long after the Revenue Divisional Officer had ordered the assignment of the land, no action was taken on it.

*Manjalar Scheme*

* 1414 *Q.*—SRI R. SRINIVASA IYER (on behalf of SRI N. R. THIAGARAJAN) : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க் கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

மதுரை ஜில்லா, பெரியகுளம் தாலுகா மஞ்சளாறு திட்டம் இந்த ஆண்டு வேலை துவங்கப்படுமா ?

THE HON. SRI P. KAKKAN : The matter is under consideration of the Government.

*Hospital for Orathanad*

* 1415 *Q.*—SRI R. SRINIVASA IYER : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether there is a proposal to construct a hospital at Orathanad, Thanjavur district, by improving the dispensary at the place;

(*b*) if so, at what cost and with what bed strength; and

(*c*) when will the work be taken up?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No, Sir.

(*b*) & (*c*) Do not arise.

SRI R. SRINIVASA IYER : ஒரத்தநாடு ஆஸ்பத்திரி லோகல் பண்டு டிஸ்பென்சரியாக இருந்தது தாலுகா தலைநகர ஆஸ்பத்திரியாக ஆகியிருக்கிறது. அதை கவர்ன்மெண்டு எடுத்துக்கொண்டாகி விட்டது. 3 வருஷத்திற்கு முன்னால் அதை 50 பெட்கள் உள்ள ஆஸ்பத்திரியாக விஸ்தரிக்கவேண்டுமென்ற ஒரு "ப்ரபோஸல்" இருந்தது. "இல்லை" என்று இப்பொழுது அமைச்சர் அவர்கள் பதில் சொல்லுகிறார்களே ? ஒரத்தநாடு ஆஸ்பத்திரியை ஜாஸ்தி விஸ்தரிப்பதற்கு திட்டமே கிடையாதா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : கேள்விக்குத் தகுந்த பதில் சொல்லி விட்டேன். இது தாலுகா தலைமை நகர ஆஸ்பத்திரி ஆனதினாலே எல்லா தாலுகா தலை நகர ஆஸ்பத்திரிகளையும் விஸ்தரித்து ஜில்லா ஆஸ்பத்திரி அளவுக்குக் கொண்டு வருவதாக உத்தேசம். இதற்காக மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூ. 50 லட்சம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதுவும் கவனிக்கப்பட்டு வருகிறது.

*Electricity workers—Demands*

* 1418 *Q.*—SRI T. S. RAMASWAMI (on behalf of SRI T. T. DANIEL) : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether the electricity workers of the Tamilnad Electricity Workers' Federation has issued notice to the Electricity Board that the electricity workers will make a token strike on 13th February 1961 throughout the State; and

(*b*) the demands of the electricity workers?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Yes, Sir. The date mentioned in strike notice was 8th February 1961 and not 13th February 1961.

26th August 1961]

(*b*) (i) withdrawal of notice issued by the Madras State Electricity Board under section 9 (*a*) of the Industrial Dispute Act proposing a reduction in the number of days of casual leave and National Festival holidays; and

(ii) enhancement of Dearness Allowance.

SRI K. VINAYAKAM : Did the strike fructify? If not, what was the reason for the non-fructifying of the contemplated strike? Were the demands met reasonably at least?

THE HON. SRI R. VENKATARAMAN : The strike did not fructify. I think better counsels prevailed. That is why the strike did not take place.

SRI K. VINAYAKAM : May I know whether the demands for increase of salaries, etc., were met reasonably at least?

THE HON. SRI R. VENKATARAMAN : So far as dearness allowance is concerned, it is covered by agreement between the State Electricity Board and the workers. During the currency of the settlement, no claim can be made for increase. Government declined, therefore, to refer the matter for adjudication. So far as question of revising number of holidays is concerned, the matter is before the High Court.

SRI S. M. ANNAMALAI : இந்த மின்சாரத் தொழிலாளர்களுக்கு சம்பளக் கமிஷன் சிபார்சுப்படியும் சம்பளம் தரப்படவில்லை. இவர்களுக்கான "ரூல்ஸ் அண்டு ரெகுலேஷன்ஸ்" "ப்ரேம்" செய்யவில்லை என்று சொல்லப்படுகிறது. காலதாமதம் ஆவதற்குக் காரணம் என்ன? சென்னை உயர்நீதி மன்றத்தில் வழக்கு இருந்தால்கூட, சர்க்கார் எந்த அடிப்படையிலே ஒத்துக்கொள்ளுகிறார்கள் என்பதையாகிலும் "கவுண்டர் பெடிஷனில்" சொல்லக்கூடாதா. "கவுண்டர் பெடிஷன்" போடாமல் இருப்பதற்குக் காரணம் என்ன? அதனால் பல குறைபாடுகள் மின்சார தொழிலாளர்களிடையே காணப்படுகின்றன. இதைப் போக்குவதற்கு சர்க்கார் எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன?

THE HON. SRI R. VENKATARAMAN : மின்சாரத் தொழிலில் 18 யூனியன் இருக்கிறது. ஒருவர் சொன்னபடி ஒருவர் ஒத்துக்கொள்ளுவதில்லை. சர்க்காரைப் பொருத்த அளவிலே "சர்க்கார் ஊழியர்களுக்கு கொடுக்கிற சம்பள விகிதம் கொடுக்கிறோம். சர்க்கார் ஊழியர்களுக்கு லீவு வசதி குறைக்கப்பட்டிருக்கிறது. அதை ஒத்துக்கொள்ளவேண்டுமென்று சொன்னோம். ஆனால், அவர்களுக்கு லீவு வசதிகளை குறைக்கக்கூடாது, சம்பளத்தை மாத்திரம் சர்க்கார் கொடுக்கிற அளவிற்கு மாற்றி அமைக்க வேண்டும் என்று சொன்னார்கள். இது ஒரு யூனியன் கருத்து. மற்றொரு யூனியன் "நாங்கள் லீவு வசதிகளை குறைத்துக்கொள்ளுகிறோம், சர்க்கார் கொடுக்கிற ஊதியம் முதலியவற்றை எங்களுக்கு கொடுக்கவேண்டும். அதுவும் முக்கியமாக "லிபரலைஸ்டு பென்ஷன் ரூல்ஸ்" ஸ்டாபுக்கு அதிகமாக சாதகமாக இருக்கிறது. அவைகளையெல்லாம் செய்துகொடுக்க வேண்டுமென்று சொல்லுகிறார்கள். கஷ்டம் என்னவென்றால், உயர்நீதி மன்றத்தில் ரிட் பெடிஷன் இருக்கும்பொழுது, சர்க்கார் எந்த விதமான ஒரு காரியத்தையும் செய்ய முடியாது. அப்படிச்செய்தால் உயர்நீதி மன்றரிட்டில் என்ன ஒரு முக்கியமான பிரச்னை இருக்கிறதோ, அதை சர்க்கார் முன்கூட்டியே முடிவு செய்ததுபோல் ஆகிவிடும். உதாரணமாக இப்பொழுது மின்சார போர்டுக்கும், தொழிலாளர்களுக்கும் ஹைகோர்ட்டில் இருக்கக்கூடிய முக்கியமான பிரச்னை என்னவென்று சொன்னால், அவர்களுக்கு "இண்டஸ்டிரியல் டிஸ்ப்யூட்ஸ் ஆக்ட்" அமுல் ஆகுமா, ஆகாதா

என்பது. மின்சார போர்டினுடைய வாதம் அவர்களுக்கு தனியாக "ரூல்ஸ் அண்டு ரெகுலேஷன்ஸ்" இருக்கிறது, அதனால் அவர்களுக்கு "இண்டஸ்டிரியல் டிஸ்ப்யூட்ஸ் ஆக்ட்" அமுலாகாது என்பது. தொழிலாளர்கள் வாதம் அவர்களுக்கு "ஷாப்ஸ் ஆக்ட்" அமுல் ஆகும், "இண்டஸ்டிரியல் டிஸ்ப்யூட்ஸ் ஆக்ட்" அமுலாகும் என்பது. உயர்நீதி மன்றம் தான் இதில் தீர்ப்பு செய்யவேண்டுமே தவிர, நாங்கள் எப்படி தீர்ப்பு செய்வது ? தொழிலாளர்கள் எல்லோரும் சேர்ந்து ஒரு ஒப்பந்தத்திற்கு வந்தால், அதில் சர்க்கார் லேபர் டிபார்ட்மெண்டு முன்நின்று தீர்த்து வைப்பதற்கு தயாராக இருக்கிறது. ஆகவேதான், அவர்கள் லீவு வசதிகளை சர்க்கார் ஊழியர்களுக்கு கிடைக்கும்படியான அளவுக்கு குறைத்துக் கொண்டால் அவர்களுக்கு சம்பளவிகித வசதிகளை சர்க்கார் தலையிட்டு ஆவன செய்வதற்கு தயாராக இருக்கிறது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

**Sri V. K. KOTHANDARAMAN** : ஸார், தொழில் இலாகா சொல்லக் கூடிய தீர்ப்புகளை, மின்சார இலாகா அமுல் படுத்துவதில்லை என்பது உண்மையா ? அப்படியானால், தொழில் இலாகாவுக்கும், மின்சார இலாகாவுக்கும் முரண்பாடு ஏற்பட்டிருப்பதற்குக் காரணம் என்ன ? அதைத் தீர்க்க என்ன நடவடிக்கை சர்க்கார் எடுக்கப் போகிறார்கள் ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : தொழில் இலாகா யோசனையை போர்டார் ஏற்றுக்கொள்ளவில்லை ; கன்சிலியேஷன் முடிந்த பிறகு மந்திரியிடம் சொன்னார்கள். அதன் பேரில், இரண்டு தரப்பினரையும் கூட்டி, மந்திரி ஆலோசனை கூறினார்கள். அந்த ஆலோசனை தப்பு என்று இப்பொழுது ஹைகோர்ட்டில் ரிட் போட்டிருக்கிறார்கள். அவர்களுக்கு ஹைகோர்ட்டில்தான் நம்பிக்கையும், பிரியமும் இருக்கிறதெனத் தெரிகிறது. ஹைகோர்ட்டு தீர்ப்பு அளிக்கும் வரை ஒன்றும் செய்வதற்கில்லை.

**Sri J. MATHA GOWDER** : மின்சார இலாகாவை அத்தியாவசிய சர்வீஸ் என்றும் அங்கு ஸ்டிரைக் செய்யக்கூடாது என்று உத்தரவோ அல்லது ஒரு சட்டமோ நிறைவேற்றச் சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : நான் அவசியம் என்று நினைக்கவில்லை.

**Sri T. S. RAMASWAMI** : May I know, Sir, whether the Government have been impleaded as a party in the writ petition in the High Court? May I know what is the attitude of the Government and may I also know whether the Industrial Disputes Act applies to the workers or not?

**The Hon. Sri R. VENKATARAMAN** : The Government is a party and have been impleaded as such in the writ petition. But Government are not going to take any stand on this.

**Sri S. M. ANNAMALAI** : அமைச்சரவர்கள் பதிலில், லீவு வசதிகளைக் குறைத்துக் கொண்டால், சர்க்கார் சம்பள விகிதங்களைக் கொடுப்பார்கள் என்று சொன்னார்கள். 18 யூனியன்களில் மெஜாரிடித் தொழிலாளர்கள் அதை ஒத்துக் கொண்டால், அப்படி அவர்கள் லீவு வசதிகளைக் குறைத்துக் கொண்டால், சம்பளக் கமிஷன் சிபாரிசுகள்படி சம்பளம் அவர்களுக்குக் கொடுப்பார்களா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : பதினெட்டு யூனியன்களில், திராவிட முன்னேற்றக் கழகத்தின் அனுதாபம் பெற்ற யூனியன் ஒன்று இருக்கிறது. ஒரு யூனியன் மட்டும் சொன்னால், நாங்கள் அதை வைத்துக் கொண்டு அமுல் நடத்த முடியாது. மெஜாரிடி ஆப் தி ஒர்கர்ஸ் ஒத்துக் கொண்டால்தான் செய்ய முடியும். தனிப்பட்ட முறையில்

26th August 1961]

நான் ஆலோசனை சொன்னேன். சர்க்கார் விதிகளை விதித்திருக்கும்போது, ஒன்றை ஒத்துக் கொண்டால் எல்லாவற்றையும்தான் ஒத்துக்கொள்ள வேண்டும் என்று. சம்பள வசதிகள் வேண்டுமென்றால், சர்க்கார் விதிகள்படி லீவு வசதிகளையும் குறைத்துக் கொள்ளத் தயாராக இருக்க வேண்டும். அப்படி ஒத்துக்கொண்டால், நாங்கள் சம்பள வசதிகள் கொடுக்க ஏற்பாடு செய்கிறோம் என்று சொன்னேன். அதற்கு முன்னால், கோர்ட்டில் இருக்கும் காரணத்தினால், தொழிலாளிகள் எந்த விதமான ஒப்பந்தத்திற்கும் ஒத்துக்கொள்ளவில்லை.

*Handloom Technological Institute*

* 1419 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நமது ராஜ்யத்தில் கைத்தறி தொழில் நுட்ப கழகங்கள் எங்கெங்கே ஆரம்பிக்கப்பட்டுள்ளன ?

(இ) இனிமேல் எங்கெங்கே ஆரம்பிக்க உத்தேசம் ?

(உ) அவைகளில் குறுகிய கால பயிற்சி கொடுக்க உத்தேசம் உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Institutes of Handloom Technology have not been started in any place by the Government. There is, however, an Institute of Handloom Technology at Salem conducted by the All-India Handloom Board from 1st July 1960.

(*b*) There are no proposals to start such institutions in the near future.

(*c*) Does not arise.

*Textile mills*

* 1420 *Q.*—SRI M. KALYANASUNDARAM (on behalf of SRI N. K. PALANISAMI) : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether any decision has been taken regardnig nationalisation of textile mills; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

*Disappearance of patient (Government General Hospital, Madras)*

* 1421 *Q.*—SRI S. M. ANNAMALAI : } SRI A. A. RASHEED : } Will the Hon. the Minister for Revenue be pleased to state whether a woman patient disappeared from the General Hospital on 4th April 1961?

THE HON. SRI M. A. MANICKAVELU : Yes. Sir. The woman patient was subsequently admitted and treated in the hospital from the 5th to 11th April 1961. She was discharged cured from the hospital on 12th April 1961.

SRI A. A. RASHEED : May I know, Sir, the circumstances of her disappearance from the hospital?

THE HON. SRI M. A. MANICKAVELU : காயத்திற்கு சிகிச்சை செய்து கொள்ள ஆஸ்பத்திரிக்கு வந்தார்கள். பரிசீலனை செய்து, ஆபரேஷன் தியேட்டருக்கு அனுப்பினார்கள். அங்கே நிறைய ஆள்கள் இருந்ததால், காத்திருக்க வேண்டியிருந்தது. அதற்குள் அந்த அம்மா

கூட வந்திருந்த அம்மாளுக்கு காப்பி சாப்பிட வேண்டும் போல் இருந்தாற் போல் இருக்கிறது, அவர்கள் ஹோட்டலுக்குப் போனார்கள். இந்த அம்மாளும் கூடவே போனார்கள். காப்பி சாப்பிட்ட இடத்தில் ஆஸ்பத்திரி சீட்டை விட்டு விட்டார்களோ என்னவோ, திரும்பி வந்தபோது கேட்டில் அவர்களை விடவில்லை. அட்மிஷன் டிக்கட்டை தொலைத்து விட்டதால் அப்படியாகி விட்டது. நல்ல வேளையாக மறுநாள் அவள் புருஷன் அழைத்து வந்து விட்டார்; அதன் பிறகு நாலு ஐந்து நாட்கள் அங்கேயிருந்து சிகிச்சை பெற்றார்கள்.

SRI S. M. ANNAMALAI : அமைச்சரவர்கள் அந்த அம்மாளின் புருஷன் மறுநாள் அழைத்து வந்ததாகச் சொன்னார்கள். அந்த அம்மாள் ஆஸ்பத்திரியை விட்டுப் போனதாக பத்திரிகைகளில் வந்ததன்பிறகு, போலீஸ் கொண்டுவந்ததாகச் சொல்லப்பட்டதே. அந்த அம்மாளுக்கு என்ன நோய் என்று சொல்ல முடியுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கத்திக் குத்துக் காயத்திற்காக வந்தார்கள். போலீஸ் ஒன்றும் இல்லை இதிலே........இதிலே ஒரு திருத்தம் செய்ய வேண்டிருக்கிறது. I am sorry, புருஷன் ஏற்படுத்திய கத்திக் குத்திற்காக வந்தாள்; மறுநாள் அழைத்து வந்தது, தகப்பனார். (சிரிப்பு).

SRI S. M. ANNAMALAI : கத்திக் குத்துக் காயம் என்றால், மெமோ போட்டு, டாக்டர்கள் போலீசுக்கு தெரியப்படுத்தினார்களா ? அப்படிப் போலீசில் இருந்தால், போலீஸ் காவலில் இருந்து தப்பினது எவ்விதம் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : போலீசு உத்தரவு போட்டுச் செய்வதற்குள்ளாகவே, நல்ல வேளையாக மறுநாளே அந்த அம்மாள் அங்கு வந்து சிகிச்சை பெற்றுக் கொண்டார்கள்.

SRI K. VINAYAKAM : Sir, if a patient is brought to the hospital for treatment due to some injuries caused to her, are there not any strict measures to supervise or control the presence of the patient in the hospital till actually treatment is given? How does it happen that she could go away without anybody noticing or preventing her from going out?

THE HON. SRI M. A. MANICKAVELU : The bearer led the patient and after in forming the nurse-in-charge of the theatre, she went out, தாகம் எடுக்கிறது, காபி குடிக்கப் போகிறேன் என்றதால், விட்டு இருக்கிறார்கள். அவர்களிடம் அந்த அட்மிஷன் டிக்கட் இல்லாத காரணத்தினால், வந்த விபரீதம் இது. டிக்கட்டு இருந்திருந்தால் ஒன்றுமேயில்லை.

SRI V. S. MANIKKASUNDARAM : அந்த சம்பவம் குறித்து கிரிமினல் கேஸ் ஏதாவது ஏற்பட்டதா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : அது விஷயமாக தகவல் இல்லை.

*Accident in moving bus*

*1422 *Q*.—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether it was a fact that a woman and child were thrown out of a moving bus in Madras City on 9th February 1961 because of a sudden jolt of the vehicle;

26th August 1961]

(*b*) if so, the steps taken to avoid such accidents in future; and

(*c*) whether any compensation was given to the woman?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) It was a fact that a woman and child were thrown out of a moving bus on 9th February 1961. But this was not because of a sudden jolt of the vehicle as alleged but due to application of brake to a avert a serious accident, as otherwise a cyclist would have been crushed to death.

(*b*) Application of sudden brake is not done wantonly by any driver. Incidents of the nature in question cannot directly be attributed to the negligence or rash driving of the driver. There are, however, general instructions to all drivers not to drive in a rash or negligent manner.

(*c*) No claim for compensation has so far been received from the passenger.

SRI K. SATTANATHA KARAYALAR : ஸார், இந்த மாதிரி ஆபத்துக்கள், சாதாரணமாக பஸ்ஸுகளில், கதவுகள் இல்லாத காரணத்தால் ஏற்படுகின்றனவே, ஆகவே, கதவுகள் இட ஏதாவது திட்டம் உண்டா? அப்படிச் செய்யச் சர்க்காருக்கு ஏதாவது உத்தேசமுண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இந்த மாதிரி அதிகமாக ஆக்ஸிடெண்டுகள் வந்ததாக எனக்குக் கணக்கு இல்லை. ரொம்ப அதிகமாக வருகிறதானால், அதற்கான பாதுகாப்பு எடுக்கலாம். இது ரோாக எப்பவோ ஒரு சமயம் நடக்கும் சம்பவம்.

SRI S. M. ANNAMALAI : காம்பன்சேஷன் சம்பந்தமாக அப்ளிகேஷன் வரவில்லை என்று சொன்னார்கள். அப்ளிகேஷன் வந்தால், பரிசீலனை செய்யப்படுமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : அதுதான் சர்க்காருடைய கடமை.

SRI A. A. RASHEED : Is the Hon. Minister aware that even now, the buses arebrought to a stop suddenly and even with a jolt, Sir? 9-00 a.m.

THE HON. SRI R. VENKATARAMAN : This is too general a question for any answer, Sir.

*Sales tax (exemption for potatoes)*

*1423 *Q.*—SRI V. SUBBIAH : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நீலகிரி உருளைக்கிழங்கு வியாபாரிகள் சங்கத்திடமிருந்து உருளைக்கிழங்கின் மேல் உள்ள விற்பனை வரியை விலக்கக்கோரி அரசாங்கத்திற்கு மனு வந்ததா ?

(இ) அதன்பேரில் அரசாங்கம் எடுத்த நடவடிக்கை என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) No petition has been received recently. Potato is exempt from sales tax even from 1st April 1960.

(இ) Does not arise.

*The Madras General Sales Tax Act*

*1424 Q.—Sri S. M. ANNAMALAI : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

விற்பனே வரிச் சட்டத்தை மாற்றியமைக்கும் உத்தேசம் உண்டா ?

The Hon. Sri R. VENKATARAMAN : No, Sir.

Sri S. M. ANNAMALAI : இந்த விற்பனே வரி சட்டம் 1959-ல் ஏற்பட்டது. இரண்டாண்டுகளுக்குள் மூன்றுவது திருத்தம் கொண்டு வரப் பட்டிருக்கிறது. ஏன் அடிக்கடி அப்படி திருத்தங்கள் செய்ய வேண்டும் ? எல்லாவற்றையும் பரிசீலனே செய்து ஒரே திருத்த மசோதாவாக கொண்டு வருவதற்கு சர்க்கார் முன் வரக்கூடாதா ?

The Hon. Sri R. VENKATARAMAN : ஜனங்களுடைய கோரிக் கையிலே எப்பொழுது பார்த்தாலும் திருத்தம் வந்துகொண்டிருக்கிறது. முதலிலே ஒரு முனே வரிவேண்டுமென்று கேட்டார்கள். இப்பொழுது பலமுனே வரி வேண்டுமென்று கேட்கிருர்கள். அதிலே நியாயம் இருக் கிறது, சர்க்காருடைய வருமானம் பாதிக்கப்படுகிறது என்று தெரிந்தால் நாங்கள் திருத்துகிறேம். சர்க்காராகவே இதையெல்லாம் திருத்துவதில்லே. ஜனங்களுடைய கோரிக்கைகளே வைத்துக்கொண்டுதான் திருத்து கிறேம். விற்பனேவரி போன்ற வரிச் சட்டங்களே ஐந்து வருடத்திற்கொரு முறை ஆராய்வது நல்லது. ஐந்து வருடங்களுக்குப் பிறகு ஒரு நிபுணர் போட்டு ஆராய்ச்சி செய்யலாம். இதைப்பற்றி அந்த சமயத்தில் யோசனே செய்யப்படும்.

*Strike (B. & C. Mills)*

* 1426 Q.—Sri S. PAKKIRISAMI PILLAI : Will the Hon. the Minister for Industries be pleased to state the action taken by the Government on the strike notice given by the Madras Labour Union as a result of the management of the B. & C. Mills having refused to concede it demands of the B. & C. Mill workers?

The Hon. Sri R. VENKATARAMAN : Conciliation was held by the Labour Officer, Madras, but no settlement was possible. After examining the conciliation reports, the Government referred the following demands for adjudication.

(i) Gratuity scheme to the operatives of the Mills.

(ii) Revision of the gratuity scheme for the staff; and

(iii) Fixation of scales of pay for the several categories of staff in the light of the recommendations of the Central Wage Board for the Cotton Textile Industry, classification and fitment.

Sri S. PAKKIRISAMI PILLAI : டெக்ஸ்டைல் மில் இப்பொழுது பப்ளிக் யூட்டிலிடி சர்விஸ் என்ற தலேப்பின் கீழ் வருகிறது. அதிலே வேலே செய்யக்கூடிய தொழிலாளர்களின் கோரிக்கைகள் அவ்வளவையும் கோர்ட்டுக்கு விடவேண்டும், பகுதி பகுதியாக விடக்கூடாது என்று சட்ட விதிகள் சொல்லுகின்றன. அந்த முறையிலே இவர்கள் கோரிக்கைகளே மொத்தமாக விடாமல், சில கோரிக்கைகளே மட்டும் விட்டு மீதியை நிறுத்திவைப்பதற்கு காரணமென்ன ?

The Hon. Sri R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் சொல்லுவது சட்டப்படி சரியல்ல. பப்ளிக் யூட்டிலிடி செர்விஸில்கூட சர்க்கார் சரி என்று நினேத்தால்தான் அட்ஜுடிகேஷனுக்கு விடவேண்டும். எல்லாக் கோரிக்கைகளேயும் விடவேண்டுமென்று சொல்லுவது சட்டபூர்வமாக தவறு. என் இதைப்பொறுத்தவரையில் விடவில்லேயென்று சொன்னல் அதற்கு

சில காரணங்கள் இருக்கின்றன. இப்பொழுது டெக்ஸ்டைல் மில்லிலே வேலை செய்யும் ஒரு ஸ்வீப்பராக இருந்தாலும்கூட வேஜ் போர்டு சிபாரிசு பிரகாரம் கொடுக்கவேண்டும். அப்படியிருக்கும்பொழுது என்ஜினீயரிங் தொழிலாளர்களுக்கு வேறு சம்பள விகிதம் கொடுக்கவேண்டுமென்று சொன்னால், டெக்ஸ்டைல் வேஜ் போர்டு சிபார்சையும் அமுல் செய்ய வேண்டும். அதோடு மற்றொன்றையும் கொடுக்கவேண்டும் என்று சொல்லு வது சரியல்ல என்று நினைத்து அதை விடவில்லை.

**Sri S. PAKKIRISAMI PILLAI :** இந்த டெக்ஸ்டைல் மில்லிலே வேலை செய்யும் இன்ஜினீயரிங் தொழிலாளர்களுக்கு மிகக்குறைந்த கூலி கொடுக்கப்படுகிறது என்று தெரிந்தும், அவர்களுடைய கோரிக்கை நியாய மென்று தெரிந்தும்கூட, விடமுடியாது என்று சொல்வதில் என்ன அர்த்தம் இருக்கிறது ?

**The Hon. Sri R. VENKATARAMAN :** அங்கத்தினர் அவர்கள் சொன்ன **(premises)** இரண்டையும் சர்க்கார் ஒப்புக்கொள்ளவில்லை. டெக்ஸ்டைல் தொழிலாளர்களுக்கு டெக்ஸ்டைல் வேஜ் போர்டு என்ன சிபாரிசு செய்திருக்கிறதோ அதுபடி கொடுப்பதுதான் நியாயம் என்று நான் நினைக்கிறேன். தங்களுக்கு ஒரு மில்லிலே சாதகமாக இருக்கும் என்பதற்காக மாறுதல் செய்ய ஆரம்பித்தால், 130 மில்களிலேயும் தகராறு வந்துவிடும். ஆகவே டெக்ஸ்டைல் வேஜ் போர்டு சிபாரிசுகளின்படி டெக்ஸ்டைல் மில்களிலுள்ள எல்லா தொழிலாளர்களுக்கும் கொடுக்க வேண்டும், அதற்கு மாறாக எதுவும் செய்யக் கூடாது என்பது சர்க்காருடைய கொள்கை.

*Housing (Plantation Labourers)*

* 1427 *Q.*—Sri K. PONNIAN (on behalf of Sri M. A. B. ARUMUGHASAMY): கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க் கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நம் மாநிலத்தில் மலைத்தோட்டத் தொழிலாளர்களுக்கு வீடு கட்டிக்கொடுக்கும் திட்டம் உண்டா ?

(இ) ஆமென்றால் மதுரை மாவட்டத்தில் எத்தனை தோட்ட முதலாளி கள் இதற்கு மனுச் செய்துள்ளார்கள் ?

(உ) எத்தனை மனுக்கள் அங்கீகரிக்கப்பட்டன ?

(எ) இதற்காக சாங்ஷன் செய்யப்பட்ட தொகை எவ்வளவு ?

(ஐ) அவைகள் கட்டி முடிக்கப்பட்டனவா ?

**The Hon. Sri R. VENKATARAMAN :** ( அ ) Yes, Sir.

( இ-ஐ) Five planters applied for loans amounting to Rs. 2,83,200 for construction of 160 houses. All the loans applied for were sanctioned. Loans amounting to Rs. 2,31,360 were disbursed. One hundred and twenty-four houses have been completed.

**Sri K. PONNIAN :** தோட்டத் தொழிலாளர்களுக்கும், தோட்ட முதலாளிகளுக்கும் ஏற்பட்டுள்ள ஒப்பந்தத்தில் வருஷத்திற்கு 100-க்கு 8 பேர்க்கு வீடுகள் கட்டிக் கொடுக்கப்பட வேண்டுமென்று சொல்லப்பட்டி ருக்கிறது. சர்க்கார் கடன் உதவி கொடுத்தாவது இதை 15 சத விகிதமாக உயர்த்த முன்வருவார்களா ?

**The Hon. Sri R. VENKATARAMAN :** இதற்கு நாங்கள் கொடுக்கிறோம் என்று சொன்னாலும் கடன் தொகையை வாங்கிக்கொள்ளு வதற்கு சரியான மனுக்கள் வரவில்லை. அதற்கு காரணம் என்ன வென்றால், கடன் வாங்குகிறவர்கள் ஜாமீன் தொகை கொடுக்கவேண்டி யிருக்கிறது. தேயிலை எஸ்டேட்டுகளிலும் பிளாண்டேஷன்களிலும் நடை

முறைக் கடன்களுக்காக வேறு இடங்களில் சொத்தை ஜாமீன் வைத்து கடன் வாங்குவதால் ஒரு ஜாமீனுக்கு கொடுத்த சொத்தை சர்க்காருக்கு ஜாமீனை வைத்தால் சர்க்கார் அதை ஏற்றுக்கொள்ளுவதற்கு இல்லை என்ற காரணத்தினால்தான் அதிகமான மனுக்கள் வருவதில்லை. பணம் கொடுப்பதிலே குறை இருக்கிறதென்று சொல்ல முடியாது.

SRI M. KALYANASUNDARAM: சட்டப்படி ஆண்டு ஒன்றுக்கு எட்டு சதவிகிதம் வீடுகள் கட்டிக் கொடுக்க வேண்டுமென்பதை எத்தனை முதலாளிகள் நிறைவேற்றி இருக்கிறார்கள். அப்படி கட்டத்தவறியவர்களின் மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது?

THE HON. SRI R. VENKATARAMAN: கட்ட வேண்டும் என்று நாங்கள் வற்புறுத்திக்கொண்டு வருகிறோம். அதற்கு மேல் என்ன நடவடிக்கை எடுக்க முடியும் என்பது புரியவில்லை. சட்டப்படி ஏதாவது தண்டனை விதிக்க முடியுமோ என்று பார்த்தால், அப்படி ஒன்றும் செய்ய முடியாது. சர்க்கார் மீண்டும் மீண்டும் வற்புறுத்திக்கொண்டு வருகிறார்கள். சில எஸ்டேட்டுகளிலே அவர்கள் சொந்த நிதியிலிருந்து வீடுகள் கட்டிக் கொண்டு வருகிறார்கள். ஓரளவுக்கு இப்பொழுது வீடுகள் கட்டப்பட்டு வருகின்றன. இதற்கு முன் இருந்த நிலைமையைவிட இப்பொழுது சற்று அபிவிருத்தி ஏற்பட்டிருக்கிறது.

SRI J. MATHA GOWDER: தோட்ட முதலாளிகள் வீடுகள் கட்டிக் கொடுப்பதிலே வேண்டுமென்றே தாமதம் செய்துகொண்டு வருகிறார்கள் என்பது அமைச்சருக்குத் தெரியுமா? இனியாவது இத்தனை வருஷங்களுக்குள் இத்தனை வீடுகள் கட்டி முடிக்க வேண்டுமென்று சர்க்கார் வற்புறுத்துமா?

THE HON. SRI R. VENKATARAMAN: இப்பொழுதே உத்தரவுகள் இருக்கின்றன. அவர்கள் வேண்டும் என்றே வீடுகள் கட்டாமலிருக்கிறார்கள் என்று சொன்னால் அதை அவர்கள் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். ஒவ்வொரு வருஷமும் எவ்வளவு வீடுகள் கட்டப்பட்டு இருக்கின்றன, அப்படிக் கட்டவில்லை என்றால் ஏன் கட்டவில்லை என்பதையெல்லாம் பிளாண்டேஷன் இன்ஸ்பெக்டர் மூலம் விசாரிக்கிறோம். அவர்களுக்கு இருக்கிற கஷ்டங்களை எல்லாம் எடுத்துச் சொல்லுகிறார்கள். சிலர் பண வசதி இல்லை என்று சொல்லுகிறார்கள். இதையெல்லாம் சர்க்கார் கவனித்து எவ்வளவு அதிகமாக வீடுகள் கட்ட முடியுமோ அதற்கான வழி வகைகளை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். வருஷா வருஷம் பரிசீலனை செய்கின்ற காரணத்தினால் இப்பொழுது வீடுகள் கட்டுவதற்கு முன் வந்திருக்கிறார்கள் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN: தேயிலைத் தோட்ட தொழிலாளிகள் வீடுகள் இல்லாமல் மிகவும் மோசமான நிலைமையிலே அட்டைக்கு பயந்துகொண்டு இருக்கக்கூடிய நிலைமையிலே பலவிதமான இன்னல்களுக்கு ஆளாகி இருக்கிறார்கள் என்பதை கனம் அமைச்சர் அவர்கள் நேரிலே சென்று பார்த்தார்களா? அதன் காரணமாகத்தான் சுதந்திரப் போராட்ட காலத்தில், பாரதியார் "தேயிலை தோட்டத்திலே" என்ற பாட்டை பாடியிருக்கிறார். ஆகவே இந்த தொழிலாளர்கள் விஷயத்தில் விசேஷ கவனம் செலுத்தி, தனிச் சலுகைகள் காட்டி உடனடியாக வீடுகள் கட்டுவதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுத்துக்கொள்ளுவார்களா?

THE HON. SRI R. VENKATARAMAN: கனம் அங்கத்தினர் அவர்கள் பிளாண்டேஷன்ஸ்களை பார்ப்பதற்கு முன்னாலேயே 15 அல்லது 20 வருஷம் நான் பிளாண்டேஷன்ஸ் லேபர் பிரெஸிடெண்டாக இருந்திருக்கிறேன். ஆகவே எனக்கு தெரியுமா என்று கேட்பது மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது. இன்றைக்கு தேயிலை தோட்டத்தில் நிலைமை மாறியிருப்பதற்கு 1951-வது வருஷத்திய சட்டம்தான் காரணம். அந்தச் சட்டத்தின்கீழ் எவ்வளவு வீடுகள் கட்ட வேண்டும், என்னென்ன வசதிகள் கொடுக்க வேண்டும் என்பதற்கெல்லாம் உத்தரவுகள் பிறப்பித்து இருக்கிறோம். மூன்று அல்லது நான்காண்டுகளுக்குள்ளாக கணிசமான

26th August 1961]

முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. ஏதாவது ஒரு நல்ல காரியத்தைச்செய்தால், அது ஓரளவு செய்யப்பட்டிருக்கிறது என்பதை ஒப்புக்கொண்டு இன்னும் அதிகமாகச் செய்யவேண்டும் என்று வற்புறுத்துவதுதான் அழகு.

SRI M. KALYANASUNDARAM : தனிப்பட்ட முதலாளிகள் முன் வராவிட்டாலும் அந்தப் பகுதியிலுள்ள பஞ்சாயத்துக்கள் தோட்டத் தொழிலாளர்களுக்கு வீடு கட்ட முன் வந்தால் பஞ்சாயத்துக்களுக்கு சர்க்கார் கடன் வழங்குவார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இப்போது அந்த விதமான ஸ்கீம் எதுவும் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இல்லே.

*Lead (Udayarpalayam taluk)*

* 1428 Q.—SRI S. RAMALINGA PADAYACHI: கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) திருச்சி மாவட்டம், உடையார்பாளேயம் வட்டம், சுண்டக்குடி கிராமத்தில் வெள்ளீயம் கண்டுபிடிக்கப்பட்டதா ?

(இ) அது விஷயமாக எடுத்த நடவடிக்கை என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) No, Sir.

(b) Does not arise.

SRI S. RAMALINGA PADAYACHI : சுண்டக்குடி என்ற கிராமத்தில் கிணறு வெட்டியபோது 22 அடிக்குக் கீழே முதலில் வெள்ளி சன்னமாகத் தோன்றியது என்றும் அதனே உறுக்கி பார்த்ததில் பிறகு அது வெள்ளீயம் என்று சொல்லப்பட்டதே, அது உலோக ஆராய்ச்சி நிபுணர்களேக்கொண்டு சர்வே செய்யப்பட்டதா ? இல்லேயென்ருல் இனி சர்வே செய்யப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இந்த சுண்டக்குடி என்ற கிராமத்தில் ஒரு கிணறு வெட்டினர்கள். கிணற்றில் துத்துநாகம் கொஞ்சம் தென்பட்டது. அதை எடுத்து ஆராய்ச்சி செய்து பார்த்ததில், பழைய கிணறில் ஒரு சாமான் விழுந்திருக்கிறது போல இருக்கிறது (சிரிப்பு); ஏனென்ருல் மெட்டலிக் ஸிங்குக்கும் ஸிங்க் ஒருக்கும் வித்தியாசம் இருக்கிறது. ஸிங்க் ஓர் ஸிங்காக இருக்காது. அங்கு மெட்டலிக் ஸிங்க் அகப்பட்டது. அதனுல் ஏதோ பாத்திரம் அங்கு விழுந்திருந்து அப்போது அகப்பட்டிருக்கிறது. அவ்வளவுதான்.

*Express buses (Madras to Thanjavur)*

* 1429. Q.—SRI T. L. SASIVARNA THEVAR : Will the Hon. the Minister for Industries be pleased to state whether bus tickets in the Madras State Transport Express Buses plying from Madras to Thanjavur are issued only to those passengers who take their food in the Brindavanam Hotel at Cuddalore; and if so, the reasons therefor?

THE HON. SRI R. VENKATARAMAN : There is no basis for the question.

*House Building Schemes*

* 1430 Q.—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(a) the different House Building Schemes for which Government have given loans or grants for the current year; and

(b) the amount given and the number of houses constructed so far?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) & (b) The attention of the hon. Member is invited to the printed pamphlet entitled 'Housing in Madras State in 1960-61' placed on the Table of the House. The pamphlet contains all the information required by the Member.

SRI K. SATTANATHA KARAYALAR : இந்த வீடு கட்டும் திட்டங்களுக்காக மத்திய சர்க்காரிலிருந்து மான்யம் உண்டா ? நாம் பெற வேண்டிய மான்யம் முழுதும் பெறப்பட்டதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இதில் வீடு கட்டும் திட்டம் என்றால் பலவிதமான திட்டங்கள் இருக்கின்றன.

ஒன்று ஸ்லம் க்ளியரன்ஸ் திட்டம். இதற்கு மத்திய சர்க்காரிடத்திலிருந்து மான்யம் உண்டு.

இரண்டாவது, லோ இன்கம் க்ரூப் ஹௌஸிங் திட்டம். அதற்கு மான்யம் கிடையாது, கடன்தான் உண்டு.

மூன்றாவது மிடில் இன்கம் க்ரூப் ஹௌஸிங் ஸ்கீம். இதற்கு எல்.ஐ.ஸி.-யிலிருந்து கடன் கிடைக்கிறது—மத்திய சர்க்காரிடத்திலிருந்து கடன் இல்லை.

எந்தெந்தத் திட்டத்தில் எவ்வளவு ரூபாய் என்று இந்த புத்தகத்தில் போட்டிருக்கிறோம். மற்ற எல்லா விஷயங்களும் இந்தப் புத்தகத்தில் இருக்கின்றன என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI P. G. MANICKAM : இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே வீடு கட்டும் திட்டத்திற்கு ஒதுக்கப்பட்ட தொகையானது பூராவாகச் செலவழிக்கப்படவில்லை என்று சில ரிப்போர்டுகளிலிருந்து தெரிவதால் அந்த மாதிரி செலவழிக்கப்படாமல் இருக்கக் காரணம் என்ன ? மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலாவது ஒதுக்கப்பட்ட தொகை பூராவையும் செலவு செய்து இந்தத் திட்டத்தை வெற்றிகரமாக்க முயற்சி செய்யப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இதுதான் பொதுவாகப் பேசப்படுவதில் உள்ள தப்பு. வீடு கட்டும் திட்டத்திற்கு ஒதுக்கப்பட்ட தொகை செலவழிக்கப்படவில்லை என்று சொல்லுவது தவறு. ஸப்ஸிடைஸ்ட் ஹௌஸிங் ஸ்கீம்ஸ் முதலில் நமக்குக் கிடைத்த ரூபாயைச் செலவழித்து இன்னும் வேண்டும் என்று கேட்டு இரண்டு முறை வாங்கிச் செலவழித்திருக்கிறோம். முதலில் 55 லட்சம் ரூபாய் கொடுத்தார்கள் ; நாம் 97 லட்சம் ரூபாய் செலவழித்திருக்கிறோம். ஸ்லம் க்ளியரன்ஸில் நம்மால் முழுத் தொகையையும் செலவழிக்க முடியவில்லை. அந்த, விவரங்களைப் பற்றி இங்கே பேசியிருக்கிறோம். எந்தத் திட்டத்தைப்பற்றி என்று கேட்டால் விவரமாகச் சொல்லலாம்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : சில பிராந்தியங்களில் சிமெண்ட் இரும்பு முதலியன கிடைக்காமல் இந்தத் திட்டங்களின்கீழ் வீடு கட்டுவது தாமதப்பட்டு அதன் காரணமாக சர்க்கார் கிராண்ட் லாப்ஸ் ஆனதுண்டா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : சிமெண்ட் ஷார்ட்டேஜ் எப்ரல் மாதத்திலிருந்து ஏற்பட்டது. சர்க்கார் கிராண்டெல்லாம் மார்ச் மாதத்துடன் முடிகிறது. ஆகையால் லாப்ஸ் ஆக வழியில்லை.

SRI S. NAGARAJA MONIGAR : ஸார், வழக்கமாக இந்த வீடு கட்டுவதற்காக கொடுத்த கடன்களிலே இந்த ஆண்டிலே ஏற்கெனவே இந்தியாவிலேயே எங்காவது ஒரு வீடு அவருக்கு இருந்தாலும் அல்லது ஒரு வீட்டில் பாகம் இருந்தாலும் கடன் கொடுக்கக்கூடாது என்று உத்திரவு பிறப்பிக்கப்பட்டதால் இப்போது வீடு கட்டுவது தேக்கம் அடைந்திருக்கிறது

26th August 1961]

என்பது சர்க்காருக்குத் தெரியுமா. இப்படி விதித்ததினாலே புதிய சொஸைட்டி தவிர ஏற்கெனவே ஆரம்பிக்கவேண்டிய நிலைமையில் இருக்கக் கூடிய சொஸைட்டிகளும் பாதிக்கப்பட்டிருப்பது சர்க்காருக்குத் தெரியுமா? அப்படியானால் என்ன பரிகாரம் தேடி வருகிறார்கள்.

THE HON. SRI R. VENKATARAMAN : வீடு இல்லாதவர்களுக்கு கடன் கொடுத்து வீடு கட்டிக்கொடுக்கவேண்டும் என்பது சர்க்காருடைய கொள்கை. இப்போது தேக்கம் இருப்பது உண்மைதான். இதிலிருந்து என்ன தெரிகிறது என்றால் வீடு கட்டும் திட்டத்தின்கீழ் கடன் மனு போட்டவர்கள் ஒரு வீடு, இரண்டு வீடு வைத்திருப்பவர்கள்தான் என்று. இந்தத் திட்டத்தை வீடு இல்லாதவர்களுக்குப் பயன்படுத்த வேண்டுமே யல்லாமல் வீடு இருப்பவர்களுக்கே உதவி கொடுப்பது நியாயமல்ல. ஆகையால்தான் சர்க்கார் இந்த மாதிரி உத்திரவு போட்டிருக்கிறது. ஆனால் இதில் ஒரு மாறுதல் செய்ய உத்தேசித்திருக்கிறோம். கூறை வீடு இருந் தால் அதை சேர்க்கப்போவதில்லை. ரூபாய் 3,000-க்கு மேல் மதிப்புள்ள வீடு இருந்தால் அப்போது கொடுக்கக்கூடாது என்று சொல்லப்போகிறோம்.

SRI M. KALYANASUNDARAM : கைத்தறி நெசவாளர்களுக்கு வீடு கட்டிக்கொடுக்க இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒதுக்கப்பட்ட தொகை செலவழிக்கப்பட்டதா. பார்லிமெண்டில் சென்னை அரசாங்கம் பூரா தொகையையும் செலவழிக்கவில்லை என்று அமைச்சர் அதில் சொல்லி யிருப்பதை அமைச்சர் அறிவாரா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே கைத்தறி நெசவாளர்களுக்கு 1,600 வீடுகள் கட்டவேண்டு மென்பது திட்டம். நாங்கள் 1,900 வீடுகள் ஸாங்ஷன் செய்திருக்கிறோம். ஸாங்ஷன் செய்தது பல விதமான கட்டங்களில் இருக்கும். மத்திய சர்க்கார் கணக்கில் முடிவடைந்து பணம் வாங்கியதுதான் இருக்கும். எங்களிடத்தில் பாதி வீடு கட்டுவதற்கு பாதித் தொகை, முக்கால் வீடு கட்டுவதற்கு முக்கால் தொகை என்று கொடுத்திருக்கக்கூடிய கணக்கு இருக்கும். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மத்திய சர்க்கார் ஒதுக்கிய தொகைக்கு அதிகமாக கைத்தறி நெசவாளர்களுக்கு வீடு கட்டும் திட்டத்தில் செலவழித்திருக்கிறோம் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI S. M. ANNAMALAI : கிராமப் புற வீடு கட்டும் திட்டத்திற்கு போர்டு ஸ்தாபனத்தின் மூலம் உதவி கிடைக்கிறதா ? உதவி கிடைப்பதாக மத்திய சர்க்காரிடத்திலிருந்து ஏதாவது தகவல் உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அந்த விதமான தகவல் இல்லை.

SRI K. VINAYAKAM : At present if an individual wants to construct a house out of the loan or grant given by the Government, the individual will have to apply only through some organisation like the societies or banks and so is there any proposal whereby aid would be given to an individual who directly approaches the Government for such kind of loan to construct a house of his own?

THE HON. SRI R. VENKATARAMAN : They can join the newly started House Mortgage Bank and if they become members of the House Mortgage Bank, they will be eligible for loan either for improving the house or repairing the house or even building the house.

SRI V. K. KOTHANDARAMAN : வீடில்லாதவர்களுக்கு மாத்திரம் வீடு கட்டிக்கொள்வதற்கு உதவி செய்வது என்ற கொள்கை வரவேற்கவேண்டிய விஷயமே. ஆனால் அப்படி வீடில்லாதவர்கள் வீடு கட்டிக்கொள்ள உதவி கேட்கும் நேரத்தில் இந்தியாவிலேயே எங்கும்

வீடில்லை என்று அதிகாரிகளிடத்திலிருந்து சர்ட்டிபிகேட் வாங்கிவர வேண்டிய ஒரு முறை இருக்கிற காரணத்தினால் இந்தியாவிலேயே வீடு இல்லை என்று எப்படி நான் சர்ட்டிபிகேட் கொடுப்பது என்று சொல்லக் கூடிய அளவுக்கு அதிகாரிகள் தயங்குகிறார்கள் என்பது அமைச்சருக்குத் தெரியுமா? அதை மாற்றியமைத்து ஸ்டேட்டில் வேண்டுமானால் வீடில்லை என்று சர்ட்டிபிகேட் வாங்க ஏற்பாடு செய்யப்படுமா?

THE HON SRI R. VENKATARAMAN: இந்தியாவிலேயே வீடு இல்லை என்று சர்ட்டிபிகேட் கொடுக்க வேண்டும் என்ற விதியில்லை. யாராவது அந்தமாதிரி அங்கத்தினரிடத்தில் சொல்லியிருந்தால் அது விஷயம் தெரியாது கொடுத்த தகவல்.

SRI T. S. RAMASWAMI: May I know whether the Hon. Minister is in possession of information about the type of houses allotted to the Corporation and the amount of loan given to the Corporation?

THE HON. SRI R. VENKATARAMAN: About Madras Corporation, I have no information.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN: இந்த வீடு கட்டும் திட்டத்திற்காக ஒதுக்கப்படும் தொகைகள் பூராவும் பெரிய நகரங்களிலேயே வீடுகள் கட்டிக்கொள்வதற்காகச் செலவிடுவதைக் கொஞ்சம் நிறுத்தி கிராமாந்திரப் பகுதிகளிலுள்ள விவசாயிகளுக்கு, விவசாயத் தொழிலாளர் களுக்குச் சிறு சிறு வீடுகளாவது கட்டிக்கொள்வதற்கு விரிவான முறையில் அவர்களுக்குப் பணம் ஒதுக்க சர்க்கார் ஏற்பாடு செய்யுமா?

THE HON. SRI R. VENKATARAMAN: அதுதான் இப்போது செய்யப் பட்டிருக்கிறது. திரு. ராமாம்ருதத் தொண்டைமானைப் போன்றவர்கள் கிராமங்களில் ரூரல் ஹவுஸிங் ஸ்கீம்படி வீடுகள் கட்டிக்கொள் வதற்கு மனுக்கள் போடச் சொன்னால்—இப்போது கையில் நிறையப் பணம் இருக்கிற காரணத்தினால் பலருக்கு உதவி செய்ய முடியும். ஆகவே சீக்கிரம் மனுப் போடும்படி ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

SRIMATHI KOLANTHAI AMMAL: வீடு கட்டிக்கொடுக்கும் திட்டத்திலே பள்ளி ஆசிரியர்களுக்கு—கல்லூரி ஆசிரியர்களுக்கு—அதிகப்படியான வீடுகள் கட்டித்தருவதற்கு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே இடம் இருக்கிறதா என்று அறியவிரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN: கூட்டுறவு சங்கங்களுக்கு உதவி செய்யப்படுகிறது. அவர்கள் ஒரு கூட்டுறவு சங்கத்தை அமைத்துக்கொண்டால் அவற்றின்மூலம் உதவி அளிக்கப்படலாம்.

SRI S. NAGARAJA MONIGAR: நகரத்தில் வீடு கட்டிக் கொடுப்ப தற்கு பணத்தைத் திருப்பிக்கொடுக்க சக்தியுள்ளவர்களுக்கே உதவி செய்யப்படுகிறது. நாலாயிரம், எட்டாயிரம் உதவ வேண்டுமானால் வருஷம் 300 ரூபாய்க்கு மேல் அதிகமாகக் கொடுக்கவேண்டியிருக்கிறது. சொத்து உடையவர்களாலேயே இவ்வாறு திருப்பிக்கொடுக்க முடிகிறது. முன்பே வீடு உள்ளவர்களுக்கு—அல்லது இருக்கக்கூடிய வீட்டில் பங்குள்ள வர்களுக்குத்தான் நல்ல பலன் இதனால் ஏற்படுகிறதென்பதை சர்க்கார் கவனிக்குமா என்று கேட்கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN: இது வெறும் ஆர்க்யுமெண்டு தான். நான் சொல்கிற கொள்கைக்கு நேர் எதிரான வாதம் என்று சொல்கிறேன்.

26th August 1961] [Srimathi T. N. Anandanayaki]

கனம் அங்கத்தினர்கள் சொன்ன மாதிரி இந்த ஜெயில் தண்டனே அவசியமா என்று பார்க்க வேண்டும். இந்திய பீனல் கோட் குற்றங்களுக்கு சிறை தண்டனே அவசியம். சமூக விரோதமான குற்றங்கள் நடைபெறுமல் தடுக்க அத்தகைய பயத்தை வைப்பது நல்லது. இதெல்லாம் அவர்கள் முதலேப்போட்டு வியாபாரம் செய்கிருர்கள். இப்போது இருக்கின்ற முறையில் சிறு சிறு குற்றங்களுக்குக்கூட ஜெயில் தண்டனே கொடுக்கலாம். கனம் அமைச்சர் அவர்கள் பொது விவாதத்திலே இம்ப்ரிஸின்மென்ட் அண்ட் ஃபைன் என்று இருந்தால்தான் பயப்படவேண்டும், இதிலே இம்ப்ரிஸன்மென்ட் ஆர் ஃபைன் என்று தான் போட்டிருக்கிறேம், ஃபைன் மாத்திரம் போட்டு, குற்றங்கள் அதிகமாகச் செய்தால் அப்போது ஜெயில் தண்டனே கொடுக்க வழி இருக்கும் என்று சொன்ஞர்கள். இதிலே "ஆர் வித் போத்" என்று இருப்பதால் ஃபைனும் போடலாம் ஒரு மாத ஜெயில் தண்டனேயும் கொடுக்கலாம். ஒரு நாள் ஜெயிலுக்குப் போனுலே மானம் பறி போகக் கூடிய நிலே ஏற்படும். நடைமுறையில் சொல்லுவார்கள் கம்பி எண்ணிவிட்டு வந்தான் என்று. அது கௌரவக் குறைவு. பயம் இல்லாமல் போய்விடாது. நாம் ஆயிரம் ரூபாய் வரை ஃபைன் போடலாம். வாழத் தகுதியற்றவர்கள், வாழ்க்கையில் கௌரவத்தைக் குறைத்துக்கொண்டவர்கள் ஒரு சமூகத்தில் தொழில் நடத்தி வாழ முடியாது. இப்படிப்பட்ட தொழிலுக்கு சிறு குற்றங்களுக்குக்கூட சிறை தண்டனே கொடுத்து சிறையின்மீது உள்ள பயத்தை போக்கிவிட்டால் வெகு சுலபமாக சிறைக்கு போய்விட்டு மக்கள் மத்தியில் வந்து விடுவார்கள். 1,000 ரூபாய்க்கு பதில் 4,000 ரூபாய் அபராதம் போட்டால்கூட அவர்கள் கட்டிவிடுவார்கள். ஆகையால் இத்தகைய சட்டங்களில் சிறை தண்டனே இருப்பது ஜனநாயகத்திற்குப் புறம்பானது என்று நினைக்கிறேன். முதலில் 100 ரூபாய் என்று இருந்ததை 10 மடங்கு ஆக்கியிருக்கிறேம். சிறை தண்டனே போட்டு பயத்தைத் தெளியவைக்க வேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன். கட்டாயம் இதை கனம் அமைச்சர் அவர்கள் ஏற்றுக் கொண்டு ஃபைன் மட்டும் போட்டு இந்தச் சட்டத்தைத் திருத்தினுல் வரவேற்கத்தக்கதாக இருக்கும். வட்டிக்குக் கொடுத்து வாங்கும் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு மகிழ்ச்சி ஊட்டுவதாக இருக்கும் என்று சொல்லிக் கொண்டு இந்தத் திருத்தத்தை வலியுறுத்துகிறேன்.

SRI N. K. PALANISAMI : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, ஆறு மாதம் சிறை, 1,000 ரூபாய் அபராதம் என்று இருப்பதில் 1,000 ரூபாய் அபராதம் என்று இருப்பதை வேண்டுமானுலும் விட்டுவிடலாம். 6 மாதத்தை ஒரு வருஷமாக மாற்ற வேண்டும். காரணம், இதை நல்ல வியாபாரம் என்று சொன்ஞர்கள். இது ரொம்ப மோசமான ஒரு திருட்டுத் தொழில் . . . .

SRIMATHI T. N. ANANDANAYAKI : On a point of order, திருட்டுத் தொழில் என்று சொல்லுவது பாராளுமன்ற முறைக்கு உகந்ததா என்று அறிய விரும்புகிறேன்.

DEPUTY SPEAKER : The hon. Member should not use that word and he should withdraw it.

SRI N. K. PALANISAMI : இந்த வியாபாரத்திற்கு இவ்வளவு பேர்கள் பரிந்து பேசுவதே வேடிக்கையாக இருக்கிறது. இன்னின்ன முறையில் திருத்தங்கள் அசெம்ப்ளியில் கொண்டு வர வேண்டும் என்று இந்த வியாபாரத்தில் ஈடுபட்டிருக்கக்கூடியவர்கள் எல்லா அங்கத்தினர்களுடைய ரூமிலும் போய்ச்சொன்ஞர்கள். இதையும் சபையின் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : On a point of order, Sir. The insinuation of the hon. Member seems to be that hon. Members have moved their amendments to protect the interests of the money-lenders. It is not proper. . .

DEPUTY SPEAKER : There is no insinuation. The hon. Member can continue his speech.

SRI N. K. PALANISAMI : இந்த பில்லை இன்ட்ரட்யூஸ் செய்யும்போது நல்ல முறையில் இருந்தது. செலக்ட் கமிட்டிக்கு போய் இம்மாதிரியான வாதங்களை வைத்து, பான்ப்ரோக்கர்ஸ் எந்தளவு ஏமாற்ற வேண்டுமோ அதற்குரிய வசதியிருக்கிறது. ஜனங்கள் வறுமையால் பொருளை, ஒரு பொருளின் விலையை அதன் கால் பங்கு விலைக்கு அடகு
11·30 a.m. வைத்து அதைத் திருப்பி வாங்கும் நிலைமையில் கூட இல்லை, 100-க்கு 92 பேர்களுக்கு திரும்ப வாங்க முடியவில்லை. ஆகவே கடுமையான சட்டம் போட்டால்தான் மேலும் கெடுதல் செய்யாமல், ஜனங்களை ஏமாற்றுமல் இருக்கமுடியும். ஆகவே, 6 மாதம், ஆயிரம் ரூபாய் என்பது அவசியம் இருக்கவேண்டும்.

SRI V. SANKARAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இத் தொழில் ஒரு திருட்டுத் தொழில் என்று சொல்வது. . .

DEPUTY SPEAKER : The hon. Member should not use that word. I have asked the hon. Member who used that word to withdraw it. Now the hon. Member should not repeat that word.

SRI V. SANKARAN : பல தொழில்களில், இதுவும் ஒரு நல்ல தொழில் தான். சமுதாயத்திற்கு இது அவசியமாகயிருக்கிறது. சர்க்காரே வேண்டிய கடன் மக்களுக்கு கொடுக்கும்படியான நிலை வருவதுவரை இவர்களை தவிர்க்கமுடியாது. இது இருந்துதான் தீரும். இது பொருந்தாது என்று சொல்ல முடியாது. இந்த கிளாஸை எடுத்துக்கொள்ளும்போது 'takes an article in pawn from any person appearing to be under the age of eighteen years, or to be of unsound mind' என்றிருக்கிறது. இந்தக் குற்றம் ஏற்பட்டதா இல்லையா என்று பின்னுல் கோர்ட்டுக்கு விசாரணைக்கு வரும். ஆறு மாதங்களுக்கு பின் விசாரணைக்கு வரும்போது, ஆறு மாதங்களுக்கு முன்னுல் 18 வயது உள்ளவனுக தோன்றப்பட்டானு இல்லையா என்பது பற்றி ஆறு மாதங்கள் கழிந்துதான் நிர்ணயிக்கவேண்டும். அப்பொழுது, அதை சரி யானபடி நிர்ணயிக்க முடியாது. ஆறுமாதம் அல்லது ஒரு வருஷம் கழித்து, தோற்றம் எப்படியிருந்தது என்று நிர்ணயிப்பது, "போஸ்ட் மார்ட்டம் எக்ஸாமினேஷன்" போன்று நிர்ணயிக்கமுடியாது. சின்னக் குற்றங்கள்கூட இருக்கின்றன. அதற்கும் ஆறு மாத தண்டனை என்று ஏற்பட்டுவிடும், ஆறு மாத தண்டனை என்று வைக்கும் போது ஒன்றிரண்டு தடவைக்கு மேல் இதே குற்றம் இழைத்தால் அதற்கு அப்பொழுது சிறை தண்டனை என்றிருக்கலாம். ஆரம்பத்திலேயே சிறை தண்டனை என்று இருப்பது கடினமாகும் என்று கூறிக்கொண்டு இந்த திருத்தத்தை ஆமோதிக்கிறேன்.

SRI A. GOVINDASAMY : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, வட்டித் தொழில் நடத்துகிறவர்கள் குற்றம் செய்தால் சிறை தண்டனை அனுபவிக்க வேண்டுமென்ற ஷரத்து இருப்பதை நீக்கிவிட வேண்டு மென்று ஆளும் கட்சியைச் சேர்ந்த பல உறுப்பினர்கள் திறமையாக வாதாடியதைக்கண்டு உண்மையில் நான் கொஞ்சம் வருத்தப்படுகிறேன். ஒரு நாள் கம்பி எண்ணினுலும் இழுக்கு ஏற்பட்டுவிடும், அதனுல் அவர் கள் தொழில் பாதிக்கப்படும், மானம் பறி போய்விடும், என்று வாதாடி ஞர்கள். சிறை தண்டனை இருந்தால்தான் அவர்கள் தவறு செய்யாமல் அவர்களை காப்பாற்றிக் கொள்வதற்கும் தண்டனை இருக்கிறது என்ற பயத்தின் காரணமாக தவறு செய்யாமல் இருக்க வழியிருக்கும் என்ற காரணத்தினுல்தான் சிறை தண்டனை அவசியம் இருக்க வேண்டுமென்ற ஷரத்தை வலியுறுத்துகிறேம். அமைச்சர் அவர்களும் அதைத்தான் வலியுறுத்திச் சொல்கிருர்கள். ஆனுல் ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் கூடாது என்று வாதாடுவதினுல் நாம் கொஞ்சம் சந்தேகிக்க இடமிருக்கிறது. ஆறு மாதம் என்றுல் ஆறுமாதம் தண்டனை அனுபவிக்கப்

26th August 1961] [Sri A. Govindasamy]

போவதில்லை. குறுகிய அளவுதான் இருக்கும். சிறை தண்டனை கூடவே கூடாது, ஆனால் ஆயிரம் ரூபாய் அபராதம் கட்ட அனுமதிக்கலாம் என்று சொல்கிறார்கள். அப்பொழுது வட்டிக் கடைக்காரர்கள் எவ்வளவோ பணம் ஏழை மக்களிடமிருந்து லாபம் அடிக்கிறார்கள், அதில் ஒரு பகுதியை லாபமாக கட்டி விட முடியும். அது அவர்களுக்கு சாதகமான நிலையில் உள்ளது என்ற காரணத்தினால் அபராதம் வேண்டுமானால் கட்டுவார்கள், சிறைக்கு அனுப்பாதீர்கள் கோர்ட்டுக்கு அலைந்தாலும் அவர்கள் மானம் பறி போய் விடுமென்று சொல்கிறார்கள். வட்டிக் கடைக்காரர்கள், வட்டியை முன்னாலேயே எடுத்துக் கொள்ளும் நிலைமையைப் பார்க்கிறோம். பத்து ரூபாய் பெறும் பொருளை, ஆறு ரூபாய் கூட பெருது என்று சொல்லும் நிலையில் " அப்ரைஸ் " செய்யும் போது, மதிப்பு நிர்ணயிக்கும் போது குறைவாக நிர்ணயிக்கிறார்கள். தங்கத்தின் விலை தினந்தோறும் பத்திரிகைகளில் வந்தாலும் அவர்கள் வைத்ததுதான் சட்டம் என்னும் வகையில் நகைகளின் மதிப்பை குறைக்கும் அளவு அவர்கள் தொடர்ந்து குற்றம் செய்து வருகிறார்கள். ஆகவே, அவர்களுக்கு சாதகமாக வாதாடும் நிலையை மாற்றி, அவர்கள் தவறு செய்யாமல் பாதுகாக்க வேண்டுமென்றால் சிறைதண்டனை வைத்தால்தான் அவர்கள் தவறு செய்யாமல் அவர்களைக் காப்பாற்ற முடியும். அப்படி ஒரு அச்சம் இருக்கும் வகையில், அமைச்சர் அவர்கள் இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ளாது சிறை தண்டனையை அப்படியே வைக்க வேண்டும். பழனிசுவாமி அவர்கள் குறிப்பிட்டது போல் ஒரு வருஷமாக மாற்ற வேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I take exception to casting aspersions on any particular profession. Simply because there may be one or two blacksheep in a particular profession, we cannot generalise and characterise the profession, in the manner in which it was done. There are blacksheep everywhere, in every profession, and in every walk of life. Therefore, there is no reason why we should characterise a particular profession in that way. I doubt whether the hon. Members, who have moved these amendments are really favouring persons whom they have in view. Sub-clause (1) of the clause says—

'takes an article in pawn from any person appearing to be under the age of eighteen years . . .'

Some hon. Members wanted to know why the words 'appearing to be under the age of eighteen years' were used and said that the age should be something definite. If it is definite, it is more harmful to the pawnbroker because then there will be no scope for lawyers to argue his case. If the age is not definite, in the court he can say that the person looked or appeared to be more than eighteen years old and can escape. So the present wording is more advantageous for him in order to put his case. I do not think we can specifically say that the age should be eighteen years.

With regard to the sentence, it is only in the statute. It does not mean that for every offence the highest punishment must be given. What I submit is that such a provision is there like the Damocle's Sword. The Damocles' Sword must be hanging as a warning and deterrent and it does not harm anybody. Only if the person goes wrong, then only the Sword of Damocles will harm him. Otherwise, the Sword of Damocles will not harm him. So that provision must be there. Further, hon. Members

[Sri M. A. Manickavelu] [26th August 1961

should know that the Select Committee changed the original provision relating to punishment. According to the original provision, a person should be punished with imprisonment for a term which may extend to 1 year or with fine which may extent to Rs. 1,500. The Committee changed that provision so as to provide for punishment for 6 months or with fine of Rs. 1,000. So they have reduced it. As the original provision was changed after a good deal of discussion by the Select Committee, I do not see any reason why we should change the considered views of the Select Committee.

The amendments were, by leave, withdrawn.

Clause 12 was put and carried.

Clauses 13 to 15 and 1 and the Preamble were put and carried.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

"That the Madras Pawnbrokers (Amendment) Bill, 1960 (L.A. Bill No. 30 of 1960) as amended be passed."

DEPUTY SPEAKER : Motion moved—

"The Madras Pawnbrokers (Amendment) Bill, 1960 (L.A. Bill No. 30 of 1960) as amended be passed."

SRI M. KALYANASUNDARAM : Sir, under rule 114 (2) of the Madras Assembly Rules, I object to this Bill being passed into law today. Today, substantial amendments to the Bill have been accepted by the House. So I suggest that the motion for passing this Bill into law need not be taken today but may be taken up later.

DEPUTY SPEAKER : I will read Rule 114 (2) of the Assembly Rules which is follows :—

"If during the consideration of a Bill in the Assembly, any amendment is made, any member may, at the conclusion of the consideration of Bill, object to a motion being made at the same sitting for its being passed. Thereupon the Speaker, shall, unless he considers that the request is frivolous or unreasonable, not allow a motion that the Bill be passed into law to be moved at the same sitting, but the Bill shall be brought up for further consideration at a subsequent sitting."

I think the hon. Member, Sri M. Kalyanasundaram's contention is not corect. I am not agreeing with him. I rule it out of order.

SRI M. KALYANASUNDARAM : In your opinion my request is always unreasonable or frivolous.

DEPUTY SPEAKER : I rule it out of order. The Hon. Member could not cast aspersions against the Chair.

26th August 1961]

* **Srimathi T. N. ANANDANAYAKI** : கனம் துணைத் தலைவர் அவர்களே இந்த மசோதாவை நல்ல முறையில் பரிசீலனை செய்து பல திருத்தங்களை செய்து நிறைவேற்றியது மிகவும் வரவேற்கத்தக்கது. இந்தத் தொழில், மிகவும் கெட்ட தொழில், மிகவும் ஈனமானத் தொழில் என்றெல்லாம் மற்றவர்களுடைய மனம் புண்படும்படியான முறையில் பேசினது அவ்வளவு வரவேற்கத் தகுந்ததாய் இல்லை. இன்னும் பல அங்கத்தினர்கள் இந்தத் தொழில் திருட்டுத் தொழில் போன்றது என்றெல்லாம். . . .

DEPUTY SPEAKER : The hon. Member is repeating the word. She should withdraw it.

**Srimathi T. N. ANANDANAYAKI** : இவ்விதமான முறையில் பேசுவது சரியல்ல என்பதை சொல்லுவதற்குத்தான் இதைச் சொன்னேனே தவிர வேறொன்றுமில்லை. இது மிகவும் மோசமான தொழில், இதற்கு ஆதரவாக பேசுவது கூடாது என்ற முறையில் சொல்வதுகூட ஓரளவுக்கு. contempt of Legislature please look at the way, the hon. Member Sri N. K. Palanisami has spoken. என்று கூடச் சொல்லலாம். அந்த அளவில் பேசுவது சரியல்ல என்பதைத்தான் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். சட்டசபைஅங்கத்தினர்கள் தங்கள் பொறுப்பை நன்றாகத் தெரிந்து கொண்டு பேச வேண்டும், அப்போது தான். . . .

DEPUTY SPEAKER : I think the hon. Member need not advise other hon. Members. She is not the person to question it. I am not going to allow the hon. Member to speak . I think the hon. Member will restrict her speech only to the Bill, and not refer to other points during the third reading of the Bill.

**Srimathi T. N. ANANDANAYAKI** : I am speaking only on the Bill and nothing outside the Bill. I request the Deputy Speaker not to think that I am violating the rules at all.

DEPUTY SPEAKER : The hon. Member is explaining the provisions of the Bill. She need not do so during the third reading.

**Srimathi T. N. ANANDANAYAKI** : இந்த மசோதாவைப் பொறுத்த வரையில், குறிப்பாக எங்களைப் போன்ற நகரத்தை பிரதிநிதித்துவம் வகிக்கின்ற அங்கத்தினர்களுக்கு நகரத்தில் மக்கள் அன்றாடம் பணத்திற்கு எவ்வளவு கஷ்டப்படுகிறார்கள் என்பதைப் பார்க்கின்றோம். கிராமப் புறங்களில் இந்தத் தொல்லை இருக்காது. நகர் புறங்களிலே இருக்கின்ற மக்கள் அன்றாடத் தேவைக்காக கடன் வாங்குகிறார்கள். கடன் கிடைப்பதும் கஷ்டமாக இருக்கின்றது. கிராமப் புறங்களை எடுத்துக்கொண்டால் அங்குள்ளவர்களின் சொந்த ஜாமீன் பேரில் கடன் கொடுக்கப்படுகிறது. இதற்கான வசதியை இந்த அரசாங்கம் செய்து கொடுத்திருப்பது மிகவும் வரவேற்கத் தகுந்ததுதான். நகர் புறங்களை எடுத்துக் கொண்டால், சிறு தொழில் செய்கின்றவர்கள், வேறு எந்தவிதமான வழியுமில்லாமல், ஒன்றிரண்டு ரூபாய் கடன் வாங்கி அதன் மூலம் காய்கறி வாங்கி, அதைத் தலையில் சுமந்து விற்று அதிலிருந்து கிடைக்கின்ற லாபத்தைக் கொண்டு வட்டிக்கும் கொடுத்து விட்டு, மீதி இருப்பதை எடுத்து தங்கள் வாழ்க்கையை நடத்திக் கொண்டிருக்கிறார்கள். இது நகரத்தில் சர்வ சாதாரணமாக நடக்கக் கூடியதாகும். ஆனால் நகரப்புறங்களிலுள்ள மக்கள் எதை விரும்புகிறார்கள் என்றால், கிராமப்புறங்களில் அரசாங்கம் சொந்த ஜாமீனில் பணம் கடன் கொடுப்பதைப் போன்று நகரப்புறங்களில் இருப்பவர்களுக்கும் கொடுக்க வேண்டும் என்பதுதான். எவ்வளவோ ரிஸ்க் இருந்தாலும் கிராமப்புறங்களில் அவர்களுக்கு சொந்த ஜாமீனில் கடன் கிடைக்கிறது. அந்த முறையில் நகரத்தில் இருக்கக் கூடிய மக்களுக்கு நடுத்தர மக்களுக்கு குறைந்த தொகைக்கு நம்பிக்கையின் பேரில் கொடுக்கின்ற வகையில் ஒரு ஏற்பாடு செய்ய வேண்டும். இதைப்பற்றி அரசாங்கம் யோசனை

[Srimathi T. N. Anandanayaki] [26th August 1961

செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். இதைச் சொல்வதற்காகத்தான் இந்த மூன்றாவது வாசிப்பின் போது நான் பேச முன் வந்தேனே தவிர யாரையும் வம்புக்கு இழுப்பதற்கல்ல. அரசாங்கம் உடனடியாக ஆலோசிக்க வேண்டியது, கிராமப்புறங்களில் கொடுப்பது போன்று நகரப்புறங்களில் இருப்பவர்களுக்கும் கொடுக்க வழி எப்படி செய்வது என்பதைப் பற்றித்தான் இருக்க வேண்டும். இப்போது இருப்பது போன்று இந்தத் தொழில் இன்னும் நல்ல முறையில் நடப்பதற்கு வேண்டிய வசதிகளை செய்து கொடுக்க வேண்டும் என்று கூறி, இந்த மசோதாவை வரவேற்று என் வார்த்தைகளை முடித்துக் கொள்ளுகிறேன்.

*Sri R. SRINIVASA IYER : ஸார், இந்த மசோதா இப்போது நிறைவேறப்போகிறது. இன்றைக்கு இந்த மசோதா விவாதத்துக்கு வருமோ வராதோ என்ற சந்தேகத்தில் பல திருத்தங்களை பிரேரபிக்க முடியவில்லை. முன்னைய சட்டத்தில் சென்னைப்பட்டணத்தைப் பொறுத்த வரையில் லைசென்ஸ் கொடுக்கின்ற அதிகாரி சென்னை கலெக்டர் அவர்களும், மற்ற இடங்களைப் பொறுத்த வரையில் அந்தந்த இடங்களிலுள்ள ஆர். டி. ஓ. அவர்களும் இருந்தார்கள். இதை இப்போது மாற்றி. . . "Such authority as Government may appoint." என்று போடப் பட்டிருக்கிறது. பொதுவாக இதற்காக லைசென்ஸ் கொடுக்கின்ற அதிகாரி ஒரு ரெவின்யூ அதிகாரி அல்லது, அதே தரத்திலுள்ள கெஸட்டட் ஆபீஸர் என்றிருப்பது நல்லதாக இருக்கும். இது ஓர் ஆர்.டி.ஓ வாக இருக்கலாம், அல்லது கமர்ஷியல் டாக்ஸ் ஆபீசராக இருக்கலாம். இதைப் பற்றி இதற்கான விதிகள் ஏற்படுத்தும் போது ஆலோசனை செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். இதில் லைசன்ஸ் கொடுப்பதற்கு சில அதிகாரங்களையும், லைசன்ஸை கான்ஸல் செய்வதற்கு சில அதிகாரங்களையும் கொடுத்திருக்கிறோம். அதன் மீது அப்பீல் செய்ய வேண்டும் என்றால் கவர்மெண்டுக்குத்தான் செய்ய வேண்டும். அதோடு இன்ஸ்பெக்டர்களுக்கும் இதில் ஏராளமான அதிகாரங்களை கொடுத்திருக்கிறோம். இதற்கான விதிகளை எல்லாம் போடும்போது மிகவும் கவனமாகப் பார்த்து ஆலோசித்து போட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். பொதுவாக இந்த பிஸினஸ் நல்ல முறையில் இயங்கக் கூடிய முறையிலும், வாங்கக்கூடியவர்களும், கொடுக்கக் கூடியவர்களும் நசித்துப் போகக்கூடிய நிலையில் வராமலும், ஏழைகளுக்கு இதனால் கஷ்டம் ஏற்படாத வகையிலும் இந்த சட்டத்தை அமல் செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். வட்டி விகிதத்தைப் பொறுத்தவரையில் சில திருத்தங்களை அமைச்சர் அவர்கள் ஏற்றுக் கொண்டதற்கு நன்றி செலுத்துகிறேன். நியாயமான எந்த கோரிக்கையையும் நமது அமைச்சர் அவர்கள் ஆட்சேபிப்பது கிடையாது. அவருக்கு ஒத்துக் கொள்ளாததை நல்ல முறையில் எதிர் வாதம் செய்து, அதை வாபஸ் வாங்கச் சொல்லுகிறார்கள். அவர் சொல்லுகின்ற காரணங்கள் சரியானவைதான் என்பதை தெரிந்து கொண்ட பின்னால் என் போன்றவர்கள் திருத்தங்களை வாபஸ் பெற்றுக் கொள்ளுகிறோம். இந்த மாதிரி ஒரு திருத்தத்திற்கு எதிர்ப்பு கட்சி சொல்லுவதிலே மந்திரி அவர்கள் நல்ல சாமர்த்தியமான வக்கீல் கூட. அந்த முறையில் நாங்கள் "கன்வின்ஸ்" ஆகித்தான் திருத்தங்களை "வித்டிரா" பண்ணிக்கொள்கிறோம். நல்ல முறையிலே விதிகளை ஏற்படுத்திச் சட்டத்தை அமுல் நடத்த வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

கணக்கு வைத்துக் கொள்ளும் விஷயத்திலே "Panguge பற்றி சொல்லும்பொழுது "in English or in such language of the locality as may be prescribed" என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆங்கிலத்தில் வேண்டுமானால் "ஆல்டர்நேடிவ்" வாக வைத்துக் கொள்ளலாம். ஆனால், தமிழ் நாட்டிலே தமிழிலேதான் கணக்கு வைத்துக் கொள்ள வேண்டும். அதாவது, ஆங்கிலத்தில் கணக்கு வைத்துக்கு கொள்ளுவதற்கு அநுமதி கொடுப்பது ரொம்பவும் ஆபூர்வமாக கொடுக்க வேண்டும்.

26th August 1961] [Sri R. Srinivasa Iyer]

சோதனை போடுவது, மாஜிஸ்டிரேடிடம் பெர்மிஷன் வாங்கி வாரண்டில் பிடிக்கிறது சம்பந்தமான பிரிவுகளெல்லாம் இருக்கின்றன. கடன் வாங்குறவர்களுக்கும், கடன் கொடுப்பவர்களுக்கும் பாதுகாப்பு இருக்கவேண்டியதுதான். இந்தப் பாதுகாப்புகளை நல்ல முறையிலே அமுல் நடத்தி கடன் சுமுகமாக கிடைப்பதற்கு வழி வகை செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டு, இந்த மசோதாவை ஆதரித்து, இதை சட்டம் ஆக்குவதில் நானும் சேர்ந்து கொள்ளுகிறேன்.

**THE HON. SRI M. A. MANICKAVELU :** கனம் அங்கத்தினர் ஸ்ரீ ஆர். சீனுவாசய்யர் பேசின பிற்பாடு முன் கூட்டியே ஒன்று சொல்ல விரும்புகிறேன். நான் நினைத்துக்கொண்டிருந்தேன், அரசியலிலிருந்து விலகிய பிற்பாடு சும்மா வீட்டிலே உட்கார்ந்திருக்கலாம் என்று. ஆனால் சீனுவாசய்யர் நல்ல வக்கீல் என்று எனக்கு சர்டிபிகேட் கொடுத்திருக்கிறார். ஆகையால் ஏன் வக்கீல் வேலை செய்து கொஞ்சம் பணம் சம்பாதிக்கக்கூடாது என்று ஒரு ஆசை ஏற்பட்டிருக்கிறது. அது தனி.

இந்த மசோதா விஷயமாக சில விஷயங்கள் சொன்னார்கள். இது சம்பந்தமாக விதிகள் ஏற்படுத்தும்பொழுது, இந்த விவாதத்தில் தெரிவித்த கருத்துக்களை கவனத்தில் வைத்துக் கொண்டு, எந்தெந்த வகையில் **suitable** ஆக விதிகள் செய்ய வேண்டுமோ அவ்விதம் செய்யலாம். இந்த மசோதா விவாதத்தில் சில நல்ல கருத்துக்களை சொன்னதற்காகவும், சில திருத்தங்களின் கருத்துக்களை நான் ஏற்றுக் கொள்ளாத அளவிலே பதில் சொன்ன போது, அதை அங்கிகரித்து வாபஸ் வாங்கிக் கொண்டதற்காகவும், நான் நன்றி செலுத்திக் கொள்ளுகிறேன். இந்த மசோதாவில் சில குறைபாடுகள் இருக்கலாம். நான் முன்பே சொல்லியிருக்கிறேன். எந்த சட்டத்திலும் குறைபாடு இல்லாமல் இருக்காது. இந்த மன்றத்தில் இயற்றுகிற சட்டத்தில் மாத்திரம் அம்மாதிரி அல்ல. உலகத்திலேயே எந்தச் சட்டத்திலும் எல்லா குறைபாடுகளையும் நீக்கி ஒரு சட்டம் செய்ய முடியாது. நடை முறையில் ஏதாவது அசம்பாவிதம் ஏற்பட்டால், அவ்வப்பொழுது திருத்தம் செய்கிறோம், " அமெண்டிங் பில் " கொண்டு வருகிறோம். இப்பொழுது இருக்கும் சூழ்நிலையிலே நமக்கு எட்டின வரையில் நல்ல வகையிலே நாம் எந்த சட்டத்தைச் செய்திருக்கிறோம் என்று நினைக்கிறோம். பின்னால் நடை முறையில் ஏதாவது கஷ்டம் ஏற்பட்டால் அப்பொழுது பார்த்துக் கொள்ளலாம். இந்த விவாதத்திற்கு இது தான் என்னுடைய பதில்.

DEPUTY SPEAKER : The question is—

'That the Madras Pawnbrokers (Amendment) Bill, 1960, (L.A. Bill No. 30 of 1960) as amended be passed.'

The motion was put and carried and the Bill as amended was passed.

### (7) THE MADRAS LAND REFORMS (FIXATION OF CEILING ON LAND) BILL, 1960 (L.A. BILL NO. 8 OF 1960)

DEPUTY SPEAKER: Now we will take up the Madras Land Reforms (Fixation of Ceiling on Land) Bill, 1960, (L.A. Bill No. 8 of 1960).

**THE HON. SRI M. A. MANICKAVELU :** Sir, I beg to move—

'That the Madras Land Reforms (Fixation of Ceiling on Land) Bill, 1960 (L.A. Bill No. 8 of 1960) as amended by the Joint Select Committee be taken into consideration.

கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மசோதா ஒரு பெரிய மசோதா. 100-க்கு மேலே ஷரத்துக்கள் இருக்கின்றன. இதை நல்ல முறையிலே தீர்க்க ஆலோசனை செய்து, இதில் சம்பந்தப்பட்டவர்களுடைய சாட்சியத்தை எடுத்து, செலக்ட் கமிட்டி ரிபோர்ட் சமர்ப்பிக்கப்பட்டிருக்கிறது. அதிலே சில தகவல்கள் சொல்ல விரும்புகிறேன்.

[Sri M. A. Manickavelu] [26th August 1961

செலக்ட் கமிட்டி ஏற்படுத்தினதும், எதைப்பற்றி சாட்சியம் சொல்ல வேண்டுமென்பதற்காக 72 கேள்விகள் தயாரித்து எல்லோருக்கும் தெரிவித்து அவர்கள் அது விஷயமாக மெமோராண்டம் அனுப்பலாம் என்று சொல்லிக் கேட்டிருந்தோம். அதன் அடிப்படையிலே சுமார் 100, "இன்ஸ்டிடியூஷன்ஸ் அண்டு அசோஸியேஷன்ஸ்" அவர்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிவித்திருந்தார்கள். 7,600 தனிப்பட்ட நபர்கள் அவர்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிவித்தார்கள். பிற்பாடு பொறுக்குக் கமிட்டி இந்த மாகாணத்திலே பல இடங்களுக்குச் சென்று ஆங்காங்கு சாட்சியம் சொல்லுகிறவர்களை நேரில் விசாரித்து ஒரு முடிவுக்கு வந்திருக்கிறார்கள். இந்த மாதிரி சுமார் 206 இன்ஸ்டிடியூஷன்ஸ், தனிப்பட்டவர்களிடம் சாட்சியம் "ரிகார்டு" செய்து, பிற்பாடு கமிட்டி அதையெல்லாம் ஆலோசனை செய்து ஒரு முடிவுக்கு வந்திருக்கிறது. இந்தக் கமிட்டி 39 நாட்கள் உட்கார்ந்தது. இவ்வளவு பெரிய மசோதா, இவ்வளவு ஷரத்துக்கள் கூடிய மசோதாவிற்கு "டிஸெண்டிங் மினிட்ஸ்" 7 தான் வந்திருக்கிறது. அதிலே 4 இந்தச் சபை அங்கத்தினர்கள் கொடுத்திருக்கிறார்கள், ஸ்ரீ எம். கலியாணசுந்தரம் உள்பட. மேல் சபையிலிருந்து 3 பேர் கொடுத்திருக்கிறார்கள். ஆகையினாலே இதிலே "யுனானிமிடி ஆப் எக்ரிமெண்டு" அதிகமாக இருக்கிறது. கொஞ்சம் வித்தியாசம் இருக்கிறது. அதனால் தான் "டிஸெண்டிங் மினிட்ஸ்" கொடுக்கப்பட்டிருக்கிறது. ஒன்றுமே இல்லை என்று சொல்லவில்லை. இருந்தாலும், எவ்வளவு "ஆங்குலாரிடீஸ்" குறைக்க முடியுமோ அந்த வகையிலே கொண்டுவந்து இங்கே சமர்ப்பித்திருக்கிறோம்.

சில முக்கியமான ஷரத்துக்களில் பொறுக்குக் கமிட்டி ஏற்படுத்திய மாறுதல்களை மாத்திரம் இங்கே குறிப்பாக எடுத்துச் சொல்ல விரும்புகிறேன்.

முதலில் "ப்ரிஆம்பிலை" மாற்றியிருக்கிறோம்.

In moving the motion, I wish to refer briefly to the more important changes made in the Bill by the Joint Select Committee.

*Preamble.*—The preamble has been amplified, so as to state that the Bill is in pursuance of the directive principles of State policy, embodied in clauses (*b*) and (*c*) of Article 39 of the Constitution, viz., that the State should direct its policy towards securing that the ownership and control of the material resources of the community are so distributed as best to subserve the common good and that the operation of the economic system does not result in the concentration of wealth and means of production to the common detriment. The preamble also describes how the Bill seeks to achieve this object in the case of agricultural land.

A provision has been included making the proposed Act inapplicable to lands held by religious trusts of a public nature. This provision has been made as doubts have been expressed whether religious trusts can be prevented from acquiring property in future, in excess of the ceiling area, in view of the provision in article 26 (c) of the Constitution, that subject to public order and morality every religious denomination shall have the right to own and acquire property. As recommended by the Committee, the Government are taking action to bring in separate legislation for regulating the administration of the lands held by religious trusts.

The definition of the term 'agriculture' has been made comprehensive, so as to ensure the effective enforcement of the provisions of the proposed Act.

26th August 1961] [Sri M. A. Manickavelu]

Definitions of " existing sugar factory " and " new sugar factory " have been included, as the Committee considered that sugar factories which come into existence after the date of commencement of the proposed Act, viz., the 6th April 1960, should also be enabled to acquire land in excess of the ceiling area.

A definition of the term " cultivating tenant " has been included, as the provisions regarding tenancies contained in clauses 59 to 69 of the Bill should be applicable only to cultivating tenants as different from tenants.

The definition of " family " has been revised, so as to be comprehensive, covering both Hindus and non-Hindus.

In the definition of " standard acre ", the extents have been expressed in decimals instead of fractions as the Committee felt that there was much disparity in regard to fertility and yield between lands assessed at between Rs. 4 and Rs. 6 and lands assessed at between Rs. 6 and Rs. 8 Different proportions for the calculation of standard acre have therefore been prescribed for lands assessed at between Rs. 4 and Rs. 6 and lands assessed at between Rs. 6 and Rs. 8. In some cases, the equivalents in ordinary acres to a standard acre have been slightly increased. In the case of dry lands irrigated by direct flow from a Government irrigation source, it is provided that the determination of standard acre should be with reference to the availability of water from the Government irrigation source for two crops and above or for one crop only instead of with reference to the classification of the source.

Certain modifications have been made in the provisions for fixing the ceiling area of a person or family. In calculating the extent of land held by a person or family, the extent of land held by that person or by a member of that family in an agricultural company will be taken into account, while the extent of land held by him in a non-agricultural company will not be taken into account. This differenciation cannot be avoided as it will be difficult to calculate the extent of land held by the person or member of family in a non-agricultural company. New definitions of 'agricultural company' and 'non-agricultural company' have accordingly been included. A member of a family who holds separate property, including stridhana property, in his or her own name, can hold that property, in addition to the ceiling area of the family up to a certain limit. A definition of separate property * has accordingly been included and the definition of 'Stridhana land' has been omitted. The ceiling area of a family will be calculated taking into account only those members of that family who are alive on the notified date.

12-00 noon.

In the Bill as published, the period allowed for furnishing returns by persons holding land in excess of the ceiling areas was to be calculated from the date of the publication of the proposed Act. The Committee considered that it might not be possible for

all persons to know the date of the publication of the Act and that, therefore, the time for, furnishing the returns might commence from a notified date', which should be fixed by the Government and given due publicity by beat of tom-tom and publication in the newspapers. Provision has accordingly been made. A specific provision has also been made that if any person has specified the particulars of the land which he desires to retain within his ceiling area, the authorised officer shall, as far as practicable, declare the same land as comprised within his ceiling area.

A provision has been included empowering the Government to make rules specifying the classes of tenants who may be allowed to continue in possession of surplus land, and also permitting co-operative societies, land mortgage banks and agricultural companies to continue in possession of surplus land, even after the publication of the notification acquiring the land.

A provision has also been made that, on and after the notified date, no document relating to any transfer of land shall be registered unless a declaration in writing in the prescribed form is filed by the transferee before the registering authority. The registering authority will forward the application to the concerned authorised officer for necessary action.

A provision has also been included that if, as a result of marriage or adoption after the date of the commencement of the proposed Act, the extent of land held by a person or family exceeds the ceiling area, then the provisions of the Ceiling Act will be applied to such excess.

Provisions have been included that no member of the Land Board or the Sugar Factory Board shall vote or take part in the discussion of any question coming up for consideration at a meeting of the Board, if the question is one in which he is directly or indirectly interested. The provision in the Bill as introduced that the Secretary to the Board of Revenue (Land Revenue) shall be the Secretary to the Land Board has been altered, so that any Gazetted Officer may be appointed as Secretary to the Land Board. The provisions in the Bill as introduced that the Director of Agriculture shall be the Secretary to the Sugar Factory Board, but shall not be entitled to vote have been altered and it has been provided that the Director of Agriculture shall also be a member of the Sugar Factory Board and that either the Secretary to Government in the department dealing with sugar factories or the Director of Agriculture, as the Government may nominate, shall be the Secretary to the Sugar Factory Board.

The provisions relating to the surplus land held by limited owners have been altered and under the present provisions, the surplus land will be acquired straightaway and the compensation amount will be kept in deposit before the prescribed authority and the interest accruing from that amount will be paid to the person who would, for the time being, have been entitled to the possession of the land. The compensation amount will remain deposited

26th August 1961] [Sri M. A. Manickavelu]

until the same is paid to any person or persons becoming absolutely entitled thereto. Similar provisions have also been made in respect of the surplus land held by maintenance holders.

The provisions relating to the mode of payment of compensation have also been altered and it is now provided that the compensation amount will be paid either in cash or in bonds or partly in cash and partly in bonds, as the Government may deem fit, and that the bonds will be issued on such terms and carry such rate of interest as may be prescribed. Interest will be paid from the date of taking possession of the surplus land, except in cases where, under the provision referred to in item (10) above, any tenant, co-operative society, land mortgage bank or agricultural company is allowed to continue in possession of a surplus land even after the publication of the notification acquiring the land. In these excepted cases, interest will be paid from the date of publication of the notification acquiring the surplus land.

The Bill as introduced contained provisions for the survey and ryotwari settlement of inam lands and land in the transferred territory. It also contained provisions imposing some restrictions in regard to the transfer of inam lands. The committee considered that no distinction need be made between inam lands and other lands and that, in the case of inam lands, the assessment fixed under the Inams Assessment Act may be taken as the assessment for determining the standard acre as well as for calculating compensation. Where no assessment has been fixed under the Inams Assessment Act, the prescribed authority should fix the appropriate assessment for the inam land with due regard to the highest rate of ryotwari assessment payable for a land of a similar description and with similar advantage in the nearest ryotwari village. Consequent on the above changes, the Bill now contains provisions for the survey and ryotwari settlement of lands in the transferred territory only.

The provisions regarding tenancies have been changed. Under the present provisions any land owner who, on the date of the commencement of the proposed Act, held land not exceeding five standard acres and who is not assessed to income-tax for the previous year as defined in section 2 (11) of the Indian Income Tax Act, 1922, may, before the expiry of two years from the notified date, resume from the cultivating tenant for personal cultivation an extent of land which, together with the extent of land already under his personal cultivation, and the extent of land which reverted to him from his tenant, as being in excess of the tenant's ceiling area, will not exceed three standard acres. After the expiry of two years from the date of the publication of the proposed Act but before the expiry of seven years from that date, any land owner who is not assessed to income-tax for the previous year may resume from the cultivating tenant, for personal cultivation, an extent of land which together with the extent of land already under his personal cultivation and the extent of land which reverted to him from his tenant as being in excess of the tenants' ceiling

area will not exceed five standard acres. Where the total extent of the land held by any person as owner and the land held by him as cultivating tenant exceeds five standard acres; any land owner under whom such cultivating tenant is holding land may, after the expiry of two years from the date of the publication of the proposed Act, but before the expiry of seven years from that date, resume the land in such excess, from the cultivating tenant, for personal cultivation. Where more than one land owner seek to resume land from such a cultivating tenant, the authorised officer will decide after examining their respective claims. For the purpose of the above provisions cultivating tenants who hold land in excess of five standard acres have to submit returns, giving particulars of the lands, held by them, names of the owners of the lands, etc. A land owner cannot evict a cultivating tennats except for failure to pay rent, doing any act or being guilty of any negligence which is destructive of or injurious to the land or the crop thereon, neglecting cultivation altogether, using the land for a purpose which is not agricultural or wilfully denying the title of the land owner to the land.

The provisions relating to kudiyiruppus contained in the Bill as introduced have been omitted as the committee considered that separate legislation should be undertaken in regard to them. A Bill regarding kudiyiruppus has also since been introduced in the Assembly.

The provisions relating to exemptions have been modified slightly. In view of the provision referred to in item (10) above, the provision in the Bill as introduced exempting lands held by Co-operative societies registered under the Madras or the Travancore-Cochin Co-operative Societies Act, has been omitted. A new provision has been included exempting lands owned by other co-operative societies, i.e., co-operative societies registered in other States, which are approved by the Government. Another new provision is the exemption of lands held by industrial and commercial undertakings which, in the opinion of the Government, bona fide carry on industrial or commercial operations and which are approved by the Government. The exemption contained in the Bill as introduced in regard to lands containing casuarina trees has been amplified, so as to cover all lands used exclusively for growing fuel trees on the date of the commencement of the proposed Act.

The special provision for grazing lands has been slightly modified, so that only persons who on the date of the commencement of the proposed Act held land used exclusively for grazing and assesment to land revenue at Rs. 1·25 nP. and below per acre are entitled to hold such grazing land up to an extent of 50 acres in addition to the ceiling area. It has also been provided that if the grazing land so allowed becomes fit for cultivation subsequently as a result of any Government irrigation project the ceiling provision will be applied to that land.

26th August 1961] [Sri M. A. Manickavelu]

The penalty for a continuing offence has been enhanced from five rupees to fifty rupees for every day after the first during which the offence continues. The penalty for contravention of lawful orders has also been enhanced from two hundred rupees to five hundred rupees. Certain new provisions providing penalties for certain offences have also been included.

In regard to the appointment of the Land Commissioner, it has been provided that only a Board Member may be appointed as Land Commissioner.

Schedule I to the Bill has been amplified so as to include, in addition to the Nilgiris district, Kodaikanal taluk and Yercaud sub-taluk, all villages in the State which lie entirely on hill area.

In Schedule III to the Bill, the provision prescribing the scale of compensation has been modified, so as to substitute slab rates. The provision relating to the payment, in advance, of a portion of the compensation for the surplus land acquired in the transferred territory has also been changed so that only 75 per cent of the compensation, instead of 80 per cent, need be paid in advance. Consequent on the decision to treat inam lands on a par with other lands referred to in item (16) above, the provisions contained in Schedule VI to the Bill as introduced relating to compensation in respect of inam lands, lands, in lease hold villages and lands exempted from the payment of land revenue have been omitted and consequential changes have been made in Schedule III. A provision for determining compensation in respect of lands the revenue of which or a portion thereof has been assigned has also been included in the Schedule III.

Schedule IV to the Bill has also been modified restricting the compensation payable to tenant on surplus land acquired by the Government to one-eighth of the fair rent of the land. In cases where the contract of tenancy provides for the continuance of the tenancy on surplus land acquired by the Government after the expiry of the agricultural year immediately succeeding the date of the acquisition, the portion of the compensation payable to the intermediary, if any, has also been reduced, from one-half to one-fourth of the compensation payable to the cultivating tenant.

In view of the provision making the proposed Act inapplicable to land held by religious trusts, Schedule V to the Bill as introduced, which prescribed the rate of tasdick allowance payable to trusts, has been omitted.

Sir, I request the House to accept the motion.

DEPUTY SPEAKER: Motion moved—

'The Madras Land Reforms (Fixation of Ceiling on Land) Bill, 1960 (L.A. Bill No. 8 of 1960) as amended by the Joint Select Committee be taken into consideration.'

Sri R. SRINIVASA IYER : Sir, I want to make a request through you, Sir, to the Hon. Minister that his speech may be circulated to hon. Members of this House.

DEPUTY SPEAKER : It is better that it is circulated.

***Sri N. K. PALANISAMI :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இன்றைய தினம் கனம் அமைச்சர் அவர்கள் இப்படிப்பட்ட ஒரு முக்கியமான மசோதாவை . . . . . . . . . (இந்த சமயத்தில் மைக் சரியாக இயங்கவில்லை) ஆரம்ப சகுனமே சரியாக இல்லை. பன்னிரண்டு மணிக்குமேல் இந்த மசோதாவை நாம் எடுத்துக்கொண்டிருக்கிறோம். ஒருவருக்கும் இதில் அக்கரை இல்லை என்றே நினைக்க வேண்டியிருக்கிறது.

(Sri Ramachandra Reddi in the Chair.)

இந்த வேளையில் கொண்டுவரவேண்டும் என்பதற்காகவே அடகு கடைக்காரர்கள் சட்டத்தை இதற்கு முன்னால் எடுத்துக்கொண்டார்கள்போல் இருக்கிறது. வெகு நாட்களாகவே நமது நாட்டிலுள்ள விவசாயிகள், சாதாரண மக்கள் எல்லோரும் இம்மாதிரி ஒரு நிலச்சீர்திருத்தம் ஏற்பட்டு நிலமில்லாத விவசாயிகளுக்கு " மீன்ஸ் ஆப் புரொடக்ஷன் . . . . " பூமி கிடைத்து, அவர்கள் அதிகப்படியாக உற்பத்திசெய்து, காபிடல் பார்மேஷன் ஏற்பட்டு, அதன்மூலம் இன்டஸ்டிரியல் பொருள்களை வாங்கக்கூடிய சக்தி ஏற்பட்டு, அதனாலே தொழில் வளர்ச்சி ஏற்பட்டு, அதன் மூலம் அதிக அளவுக்கு அந்நியச் செலாவணி நமக்கு ஏற்படும். இத்தகைய முறையிலே இந்த சட்டம் அமையும் என்றெல்லாம் எதிர்பார்த்தார்கள். இன்றைய தினம் என்ன ஏற்பட்டிருக்கிறது ? சட்டம் வந்துவிட்டது. நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டியாகிவிட்டது. ஆனால் உழுவதற்கு பூமி எங்கே இருக்கிறது ? இது ஒரு டம்மி ஹார்ஸ் ஷோ மாதிரி இருக்கிறது. இந்தச் சட்டத்தினால் ஒருவிதமான மாறுதலும் ஏற்படப்போவதில்லை. இதனால் விவசாயிகளுக்கு எந்தவிதமான பிரயோஜனமும் கிடையாது. அதிகப்படியான பூமியே இல்லாமல், அவரவர்கள் பங்குபோட்டுக்கொண்டு பலபேர் மீது எழுதிவைத்துவிட்டு இன்றைய தினம் சர்க்காரையும் ஏமாற்றிவிட்டோம், ஏழை விவசாயிகளையும் ஏமாற்றிவிட்டோம், பொது மக்களையும் ஏமாற்றிவிட்டோம் என்று பூரிக்கும்படியான நிலையிலே நிலச்சுவான்தார்கள் சந்தோஷப்படுகிறார்கள். என்ன காரணத்திற்காக நாம் இந்த நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டுவதை ஏற்றுக்கொண்டோம்? நான்கு தினங்களுக்கு முன்புதான் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை பார்லிமெண்டில் சமர்ப்பித்தபொழுது நிலச்சீர்திருத்த சம்பந்தமாக அடிப்படையான கொள்கையை நேருஜீ அவர்கள் சுட்டிக்காட்டி இருக்கிறார்.

'Land Reform programmes, which were given a place of special significance both in the First and the Second Plan, have two specific objects. The first is to remove such impediments to increase in agricultural production as arise from the agrarian structure inherited from the past. This should help to create conditions for evolving as speedily as possible an agricultural economy with high levels of efficiency and productivity. The second object, which is closely related to the first, is to eliminate all elements of exploitation and social injustice within the agrarian system, to provide security for the tiller of soil and assure equality of status and opportunity to all sections of the rural population.'

நேருஜி அவர்கள் பார்லிமெண்டிலே பேசக்கூடிய நேரத்தில் **" This is a challenge to our Nation "** என்று சொல்லி இருக்கிறார்கள். மற்ற எல்லாக் கட்சிகளையும், இந்த திட்டத்தை ஏற்றுக்கொண்டு அதை அமுல் நடத்த உதவவேண்டும் என்று கேட்டுக் கொண்டு இருக்கிறார். பொறுக்குக் கமிட்டியிலே என்னென்ன செய்தார்கள் என்பதைப்பற்றி

26th August 1961] [Sri N. K. Palanisami]

அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். பிரியாம்பிளை மாற்றி அமைத்திருக்கிறோம் என்று சொன்னார். அதுவாஸ்தவந்தான். ஆனால் பிரியாம்பிளுக்குப் பின்னால் வரக்கூடிய கிளாஸ்களிலே சாதாரண விவசாயிகளுக்கு, கூலி விவசாயிகளுக்கு, இரண்டாயிரம் ஆண்டு காலமாக அடிமைப்பட்டு இருக்கும் ஹரிஜனங்களுக்கு எதாவது நன்மை செய்திருக்கிறார்களா என்பதை நாம் ஆராய்ந்து பார்க்க வேண்டும். இன்றைய தினம் அவர்கள் எல்லோரையும் இங்கே பேச அனுமதித்தால் நான் சொல்லுவதைத்தான் அவர்களும் சொல்லுவார்கள். நம் நாட்டிலே ஐந்தில் ஒரு பங்கு ஹரிஜன மக்கள் இருக்கிறார்கள். மனுவின் காலத்தில் இருந்து அவர்கள் அடிமைப்பட்டு கிடக்கிறார்கள். அவர்கள் முன்னேற்றமடைவதற்கு, அவர்களுக்கும் சமுதாயத்திலே சம உரிமை கொடுப்பதற்கு, இந்த சட்டத்திலே நாம் எதாவது செய்திருக்கிறோமா என்று பார்த்தால், இல்லை என்று தான் சொல்ல வேண்டும். இது எப்படி இருக்கிறது என்றால், நியாய விலைக் கடைகள் என்று வைத்து பின்னர் எல்லா அநியாயமும் அங்கே நடப்பது போல உச்ச வரம்பு என்று வைத்து பின்னர் "நோ உச்ச வரம்பு" என்று சொல்லக்கூடிய நிலைமைதான் இருக்கிறது. பழைய லாண்டு லார்டிஸம் போய் புதிய லாண்ட் லார்டிஸம் வந்திருக்கிறது. குத்தகைக்காரர்களை வெளியேற்றிவிட்டு அவர்களை கூலிக்காரர்களாக வைத்து இனிமேல் சுரண்டப்போகிறார்கள். அப்பொழுதாவது 60 பங்கு கிடைக்கும், அதை வைத்துக்கொண்டு எதோ ஜீவனம் செய்யக்கூடிய நிலைமையில் இருந்தார்கள். இந்த மசோதாவினால் அவர்கள் மேலும் அதிகமாக சுரண்டப்படக்கூடிய நிலைமை ஏற்படப்போகிறது. எக்ஸ்பிளாயிடேஷனை ஸ்டாச்சூட்டரியாக செய்துவிட்டார்கள். நிலப் பிரபுத்துவத்தை ஒழிக்க வேண்டுமென்று சொல்லும் நேரத்திலே, பழைய நிலப் பிரபு புதிய முறையிலே இன்னும் அதிகமாக சுரண்டக்கூடிய நிலைமைதான் ஏற்பட்டு வருவதை நாம் பார்க்கிறோம்.

யார் உடல் உழைப்பு கொடுத்து உற்பத்தி செய்கிறார்களோ அவர்களுக்கு எந்த அளவு பூமி கொடுக்கவேண்டும் என்ற முறையிலே யோசனை செய்யவேண்டும். ஒரு மில் முதலாளி இருந்தால், அவருக்கு "ரிபேட்" கொடுக்கிறோம், வரிகளிலிருந்து விதி விலக்குக் கொடுக்கிறோம். எதற்காக அப்படிக் கொடுக்கிறோம்? உற்பத்தியை அதிகரிக்க ஒரு "இன்ஸென்டிவ்" இருக்கவேண்டும் என்பதற்காக அப்படிக் கொடுக்கிறோம். அதுபோல், பூமியில் சதா உழைத்துக் கொண்டிருக்கிறவனுக்கு எதோ கொஞ்சம் பூமி கொடுத்து, பொறுக்கு விதை எல்லாம் கொடுத்து, உழச் சொன்னால் கண்டிப்பாக நாட்டில் உற்பத்தி பெருகும். சர்க்காரும், தேசத் தலைவர்களும் அடிக்கடி சொல்கிறார்கள், உற்பத்தி அதிகம் செய்யவேண்டும் என்று. ஆனால், உழைப்பவர்களுக்கு உற்சாகம் தரப்படுவதில்லை. உற்பத்தி ஆக ஆக, நிலப்பிரபுக்களுக்கு லாபம் இருக்கிறதே தவிர, சாதாரண கூலிக்காரர்கள், குத்தகைக்காரர்கள் இருக்கிறார்களே அவர்களுக்கு அதிக உற்பத்தி செய்வதால் எந்தவிதமான லாபமும் கிடையாது என்ற நிலை இருக்கிறது.

உச்ச வரம்பு மசோதாவில், ஐந்து பேர்களுள்ள ஒரு குடும்பம் எத்தனை ஏக்கர் சொந்த சாகுபடிக்கு வைத்துக்கொள்ளலாம் என்பதற்கு ஒரு உச்ச வரம்பு இருக்கவேண்டும். ஆறு பேர்களுக்கு மேல் இல்லாமல் அதற்குள் இருக்கக்கூடிய ஒரு குடும்பம் 15 ஏக்கர் தான் விவசாயம் செய்ய முடியும். இந்த அடிப்படையை வைத்துக்கொண்டு, பிரித்துக்கொடுத்தது போக, மிச்சம் இருக்கும் நிலத்தை நிலமில்லாதவர்களுக்குக் கொடுக்க வேண்டும். பொறுக்குக் கமிட்டி அந்த அடிப்படையில் இந்த மசோதாவைத் திருத்தாததைக் கண்டு நான் ரொம்ப வருத்தப்படுகிறேன்.

"Jesus said there should be rent" என்று சொல்வதுண்டு. ஸீஸர் இருந்த காலத்தில் வரி விதித்தார்கள். வரி விதிக்கும் போது ஏசுவைப் பார்த்து, "வரி போடலாமா? வரி போடக்கூடாதா?" என்று கேட்டார்கள். "வரி போடலாம்" என்று ஏசு சொன்னார். "ஏசு வானவர் வரி போடச் சொல்லிவிட்டார், ஆகவே வரி கொடுங்கள்," என்று வரி கேட்க ஆரம்பித்து விட்டார்கள். ஏசு இது மட்டுந்தானா சொன்னார்? அவர் எவ்வளவோ நல்லது சொன்னார். அதைக் கேட்பதில்லை. தமக்கு

வேண்டியதை மட்டும் எடுத்துக் கொள்வது வழக்கமாகப் போய்விட்டது. அதுபோல், நேருஜியின் பெயரும், காந்திஜியின் பெயரும் எதற்கெடுத்தலும் இழுக்கப்படுகிறது. அவர்கள் சொன்ன அடிப்படைக் கொள்கையைக் பொறுக்குக் கமிட்டி கடைப்பிடித்திருக்கிறதா, விவசாயிக்கு நிலம் கிடைப் கும் முறையில் மசோதா திருத்தப்பட்டிருக்கிறதா என்று பார்த்தால் அப்படி அவர்கள் செய்யவில்லை.

உண்மையான காங்கிரஸ்காரர்கள் இரண்டு பேர்கூட நியாயமான முறையில் 'இவ்வளவு தான் வுச்ச வரம்பு வைக்கவேண்டும்' என்று சொல்லி யிருக்கிறார்கள், அவர்களை நான் பாராட்டுகிறேன்.

15 எக்கர் சொந்த சாகுபடிக்கு ஐந்து பேர்களுள்ள ஒரு குடும்பம் வைத்துக்கொள்ளலாம் என்று இருக்கவேண்டும். 15 எக்கர் என்கிற போது, தஞ்சையிலுள்ள 15 ஏக்கருக்கும், ஈரோடில் காவிரிக்கரையில் இருக்கும் 15 ஏக்கருக்கும் வித்தியாசம் இருக்கிறது. ஈரோடுப் பக்கத்தில் தஞ்சையைவிட அதிகமான வருமானம் வரும். 15 எக்கர் என்கிற போது, 1,800 ரூபாய் வருமானமுள்ள பாமிலி யூனிட் என்று வைக் கலாம். அதிகப்படியாக இருந்தால் 2,800 ரூபாய் வரையில் வருமான முள்ள பாமிலி யூனிட் என்ற முறையில் உச்ச வரம்பு வைத்திருக்கவேண் டும். மசோதாவானது முதலில் சட்டசபையில் கொண்டுவரப்பட்டபோது 11 பேருக்கு 60 எக்கர் என்று இருந்தது. ஆனால், பொறுக்குக் கமிட்டி 8 பேருக்கு 60 எக்கர் என்று மாற்றியிருக்கிறது.

முன்பு ஸ்ரீதனமான ஒரு பெண் 10 எக்கர் வைத்துக்கொள்ளலாம் என்று இருந்தது. இப்பொழுது ஆணுக்கும் பத்து எக்கர் என்று சேர்க் கப்பட்டிருக்கிறது.

ஸ்டாண்டர்ட் எக்கரை நிர்ணயம் செய்யும்போதுகூட, ஒவ்வொன்றிலும் அதிகப்படுத்தியிருக்கிறார்கள்.

முதலில் ஒரு குடும்பத்தில் பெரியவன் இருந்தால், அவன் 30 எக்கர் தனியாக வைத்துக்கொள்ள முடியாது என்று இருந்தது. பொறுக்குக் கமிட்டிக்குப் பின்னால், ஒரு குடும்பத்தில் ஒருவர் தனியாக 30 எக்கர் வைத்துக்கொள்ளலாம் என்று திருத்தப்பட்டிருக்கிறது.

ஆகவே, இப்படிப்பட்ட திருத்தங்கள் கொண்டுவருவதற்குக் காரணம் என்ன ? இந்த மசோதா அடிப்படையாக என்ன சொல்கிறது ? எந்த அளவுக்கு "சீலிங் ஏரியா"வை அதிகப்படுத்தவேண்டும், எந்த அளவுக்கு குத்தகை விவசாயிகளை பூமியிலிருந்து வெளியேற்றுவது என்ற இந்த இரண்டையும் அடிப்படையாக வைத்துத்தான் பொறுக் குக் கமிட்டி இந்த மசோதாவில் திருத்தம் செய்திருக்கிறது.

முன்பு வந்த மசோதாவில், எப்ரல் 6-ந் தேதிக்கு முன்னால் ஸ்டாம்பு பேப்பரில் எழுதியிருந்து ரிஜிஸ்தர் ஆகாமலிருந்தாலும், அதை இந்த சட்டம் "பப்ளிஷ்" ஆன பிறகு ரிஜிஸ்தர் பண்ணலாம் என்று இருந் தது. இப்பொழுது அப்படியல்ல. எப்ரல் 5-ந்தேதி ஸ்டாம்ப் பேப்பர் வாங்கியிருந்தால் போதும், அதில் எழுதியிருக்கவேண்டும் என்பது இல்லை. 6-ந்தேதி சட்டம் "பப்ளிஷ்" ஆனதைப் பார்த்து, பழைய ஸ்டாம்ப் பேப்பர் இருந்தால் அதை விலை கொடுத்து வாங்கி அதில் எழுதி ரிஜிஸ் தர் செய்ய இன்னும்கூட வசதி இருக்கிறது. இந்த மசோதாவில் "சீலிங் ப்ரின்ஸிபல்" கிடையாது. அந்த அளவுக்கு இது திருத்தப்பட்டிருக்கிறது. பானல் ஆப் லாண்டு ரிபார்ம்ஸ் என்ற குழுவின் அறிக்கையிலும், ஐந்தாண்டுத் திட்டத்திலும், மகாராஷ்டிரா சட்டத்திலும் "பினாமி" ட்ரான்ஸாக்ஷன் பற்றிக் குறிப்பிடப்படுகிறது. 1952-ம் வருஷத்திலிருந்தே பினாமி ட்ரான்ஸாக்ஷனைத் தடை செய்யவேண்டுமென்று மகாராஷ்டிரா சட்டத்திலே குறிப்பிட்டிருக்கிறார்கள். ஒரிசாவில் ஒரு மாத மந்திரிசபை இருந்தபோது, 25 எக்கரா ஸ்டாண்டர்டாக வைத்தார்கள். அதைப் பொறுக் குக் கமிட்டியில் 20 எக்கரவாகக் குறைத்திருக்கிறார்கள். ஆனால், இங்கு 30 என்று இருந்ததை 60, 120 என்று சொல்லி விதி விலக்குகள் இருக்கின்றன.

26th August 1961] [Sri N. K. Palanisami]

ஏலக்காய், டீ, காபி பயிர் செய்தால், அது இக்கனமிக் யூனிட் என்று சொல்லலாம். கரும்புப் பயிர் செய்தால், கரும்பைச் சர்க்கரை ஆலைக்கு விற்கக்கூடிய நிலைமை இருக்கிறது. எதற்காக சர்க்கரை போர்டு என்று தெரியவில்லை. இதற்காக மகாராஷ்டிராவில் பெரிய தகராறு இருக்கிறது. சர்க்கரை முதலாளிகளுக்கு ஏன் விதிவிலக்கு கொடுக்க வேண்டும். விவசாயிகளுக்கு அங்கு லாபம் வந்தால், அதனால் என்ன இடைஞ்சல் இருக்கிறது ? ஏன் சர்க்கார் இடைஞ்சல் கொடுக்கவேண்டும் ? அதற்கு "எக்ஸம்ஷன்" கொடுக்கக்கூடாது. ஏதாவது பூமி போதவில்லையென்றால் இன்னும் வாங்க சான்ஸ் இருக்கிறது. டெய்ரி பார்ம் வைத்துக்கொள்ளலாம். 4 பேர் சேர்ந்து கூட்டுறவு சொஸைட்டி வைக்கலாம். இப்படிச் சொல்லி 100, 200 எக்கர் வைத்துக்கொள்ளலாம். இப்பொழுதிருக்கும் பூமிக்கு ஸீலிங் நிர்ணயம் செய்யவில்லை. இனிமேல் வாங்கக்கூடிய பூமிகளுக்கும் நிர்ணயம் இல்லை. ஒரு கதை இருக்கிறது. பஞ்ச பாண்டவர்கள் எத்தனை பேர் ? என்று ஒருவர் கேட்டார். அதற்கு அங்கிருந்து ஒரு கட்டிலைக் காண்பித்து, "கட்டில் கால்களைப் போல" என்று சொல்லி, மூன்று விரல்களைக் காண்பித்தான். மூன்று விரல்களைக் காட்டியவன் எழுதும்போது இரண்டு கோடு போட்டு, கடைசியில் அந்த இரண்டு கோட்டில் ஒரு கோட்டை அழித்துவிட்டான். ஆக, கடைசியில் பஞ்ச பாண்டவர் ஒருவர் என்ற நிலைமை வந்துவிட்டது. அதுபோல்தான் சர்க்கார் கொண்டுவந்திருக்கும் உச்ச வரம்புச் சட்டமும் இருக்கிறது. இரண்டு லட்சம் எக்கர் நிலமில்லாதவர்களுக்குக் கொடுப்பதற்காக மிச்சம் கிடைக்கும் என்று எதிர்பார்த்தோம். இப்பொழுது ஒன்றுமே கிடைக்காத அளவுக்கு மசோதா வருகிறது. பூமி பிரித்துக் கொடுக்கும் காலத்தில், அதை எப்படிப் பிரித்துக் கொடுப்பது ? கூட்டுறவு பாரம் இருக்கிறதா, இல்லையா ? இப்படியெல்லாம் பார்க்கும்போது பூமி கொஞ்சங்கூட வராது என்று தான் சொல்லவேண்டும்.

அடுத்தபடியாக, செக்யூரிடி ஆப் டெனியூர்ஸ். இதைப்பற்றி ஐந் 12-30 p.m.
தாண்டுத் திட்டத்திலும் சொல்லியிருக்கிறது. நேற்று கூட விவசாயிகள் பாதுகாப்புச் சட்டத்தின் காலத்தை நீடித்திருக்கிறோம். சப்-கிளாஸ் பி.ஐ எடுத்துக்கொண்டால் அதில் ஓட்டை. பாதுகாப்பு இருக்கிறதே தவிர அது நிலையானது அல்ல. அர்ரியர்ஸ் ஆப் ரெண்ட் என்று சொல்லி உடனே அவனை நிலத்தைவிட்டு வெளியேற்றிவிடலாம் அல்லது கூலி வேலை செய்தவர்கள் என்று சொல்லி இரண்டு பேருக்கும் தகராறு என்றால் செக்ஷன் 141-படி நிலத்திற்குள் போகக்கூடாது என்று தடுத்துவிடலாம். நிலப் பிரபுக்கள் பக்கத்தில் தான் எல்லாவிதமான சாதனமும் இருக்கிறது, ஆர். டி. ஓ.க்கள் அந்த பக்கமே ரெண்ட் பிக்சேஷன் கோர்ட்டில் தீர்ப்பளித்து விடுகிறார்கள். இவ்வாறு பலர் நிலத்தை விட்டு வெளியேற்றப்பட்டிருக்கிறார்கள். இப்பொழுது இந்தச் சட்டத்தினால் ஏற்படுகிற பலனும் என்ன ? சீலிங்குக்குக் கம்மியாக இருந்தால்— இன்கம்-டாக்ஸ் அசஸியாக இல்லாமல் இருந்தால் இரண்டு எக்கர், ஐந்து எக்கர் என்று பர்சனல் கல்டிவேஷன் என்று திரும்பப் பெறலாம் என்று இருக்கிறது. குத்தகைக்காரன் 3 எக்கர்தான் வைத்துக்கொள்ளலாம் என்று இருக்கிறது. இந்தச் சட்டத்தினால் என்ன ஏற்படும் ? குத்தகைக்காரர்களைத்தான் வெளியேற்ற முடியும். ஏற்கனவே பத்து எக்கர், எட்டு எக்கர் விவசாயம் செய்துகொண்டிருப்பவர்களை 3 எக்கர் தான் வைத்துக்கொள்ளலாம் என்று வெளியேற்ற முடியும்.

குத்தகைக்காரர்களுக்கு செக்யூரிடி இருக்கவேண்டுமென்று நாட்டில் உள்ள தலைவர்களும், அரசியல் தலைவர்களும் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். இதை எல்லோரும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு ஒரு இன்செக்யூரிடி இருப்பதால் சரியான முறையில் பூமியில் விவசாயம் செய்ய முதலீடு செய்யமாட்டார்கள். எப்பொழுது வெளியேற்றப்படுவோமோ என்றுவெள்ளாமை செய்யமாட்டார்கள். வெள்ளாமை அதிகம் செய்தால் நிலக்காரர்களுக்குக் கொடுக்க வேண்டி வரும்.

இன்றைன்று. பாக்கியுள்ள 12 மாகாணங்களில் சட்டம் செய்திருக்கிறுர்கள். பத்து வருஷம், பன்னிரண்டு வருஷம் ஒருவரிடம் சேர்ந்தாற்போல் பூமியிருந்தால் அதை உழுதுவருபவனுக்கே ஆக்குபன்ஸி ரைட் ஏற்பட்டு விடுகிறது. இங்கே அதைப்பற்றியே பெச்சில்லே. மூன்று ஏக்கர் வரையில் குத்தகைக்காரன் நிலம் வைத்துக்கொள்ளலாம். கொஞ்சம் அதிகம் இருந்தால் நிலைமை என்ன ? இஷ்டப்பட்டால் அவர்கள் வெளியேற்றப்படலாம். அவர்களுக்கு என்ன பாதுகாப்பு இருக்கிறது ?

அடுத்தபடியாக, சென்னையில் இருக்கக் கூடிய ஆசிரியர்கள், அரசாங்க உத்தியோகஸ்தர்கள், டாக்டர்கள் முதலியவர்களுக்கு கொஞ்சம் கொஞ்சம் கிராமங்களில் நிலம் இருக்கலாம். இவர்களுக்கும் பாதகம் ஏற்படாத வகையில் பாதுகாப்பு அளிக்க விதிவிலக்கு அளிப்பது மிகவும் அவசியம். அதையும் கொடுக்க வேண்டும். (கனம் ஸ்ரீ வி. ராமையா :—எந்த முறையில் ?) ஷரத்துவாரியாக விவாதம் வருகிறபோது விவரமாகச் சொல்கிறேன்.

ராஜஸ்தானில் ஒரு சட்டம் இருக்கிறது. பஞ்சாப் எலினேஷன் ஆக்ட் என்று இருக்கிறது. யார் பூமியில் சாகுபடி செய்கிறுர்களோ அவர்களுக்குத்தான் நிலம் சொந்தம் என்று செய்திருக்கிறுர்கள். இங்கே எந்தவிதமான பாதுகாப்பும் கொடுக்கப்படவில்லே. இன்றைன்று. நிலத்தில் சாகுபடி செய்கிறவன் என்றுல் அந்த நிலத்தை சுற்றி ஐந்து மைல் சுற்றளவில் வசிக்கக் கூடியவனுகவே அவன் இருக்கவேண்டும். எங்கோ சென்னையிலோ இருக்கக்கூடிய ஒருவரை சாகுபடியாளன் என்று அங்கீகரிக்க சட்டத்தில் இடமிருக்கப்படாது. அந்த மாதிரியான திருத்தமும் இதில் செய்யப்படவேண்டும்.

இன்றைய தினம் குடியானவர்களுடைய, சாகுபடியாளர்களுடைய நிலைமையை புரிந்துகொள்ளாமல், அவர்களுக்குப் பாதகம் ஏற்படும் வகையில் இந்தச் சட்டத்தைக்கொண்டு வந்திருப்பதானது அவர்கள் மத்தியில் பெரிய கிளர்ச்சி ஏற்பட இடம் அளிக்கிறது. பலருக்குச் சட்டமே இருப்பது தெரியாது. விவசாயிகளுக்குச் சாதகமான திருத்தங்களை இந்தச் சர்க்கார் ஏற்காவிட்டால் பெரிய தகராறு மட்டும் அல்ல, பெரிய போராட்டம் மாகாணம் பூராவிலும் ஏற்படும். இது கம்யூனிஸ்டு கட்சியின் பிரச்சினை மட்டும் அல்ல. உலகம் பூராவிலும், ஐரோப்பாவில் ஏற்பட்ட புரட்சி, இங்கிலாந்தில் நடந்த புரட்சி இதையெல்லாம் எடுத்துப்பார்த்தாலும்—பூஷ்வக்கள் மத்தியில் குடியானவர்கள் வதைக்கப்படுவதன் காரணமாக ஏற்பட்டவைதான். ஆகவே இன்றைய தினம் விவசாயிகளுக்கு ஆதரவு இருக்கிறதா, பணம் இருக்கிறதா என்று நினைத்து இப்படிச் செய்தால் மாபெரும் கிளர்ச்சி ஏற்படும் என்று சொல்லிக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

*Sri R. KRISHNASAMI NAIDU : கனம் தலைவர் அவர்களே, கொஞ்ச நாட்களாக எதிர்பார்த்திருந்த நிலச் சீர்திருத்தச் சட்டத்தை அரசாங்கம் இந்தச் சபையிலே கொண்டு வந்ததற்காக நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். அதைப் பெருமிதத்துடன் வரவேற்கிறேன். இந்தச் சட்டத்தைச் செய்யவேண்டுமென்ற முயற்சி கடந்த முப்பது ஆண்டுகளாக—காங்கிரசின் சரித்திரத்திலே நிலைபெற்றிருக்கிறது. 1931-ம் வருஷத்தில் கராச்சியில் கூடிய காங்கிரஸ் மகாசபையிலேயே எதிர்காலத்தில் இந்த நாட்டின் ஆட்சியும், இந்த நாட்டின் சொத்து உடைமைகளும் எவ்வாறு இருக்கவேண்டுமென்பதற்கு வழிவகைகள் செய்வதுபற்றிய கொள்கைகள் உருவாக்கப்பட்டன என்பதை யாரும் மறந்துவிட முடியாது. மேலும் இதைப்பற்றி பலவருஷக் காலமாக நாம் பலமாக ஆராய்ந்து வந்திருக்கிறோம். நாடு சுதந்திரம் அடைந்ததற்குப் பின்னுல் மகா ராஜாக்கள், ராஜாக்கள், ஜமீன்தாரர்கள் போன்ற பெரிய நிலப் பிரபுக்களுடைய நிலைமை என்ன ஆயிற்று என்று தெரியும். அவர்களுடைய நிலங்கள் எல்லாம் சாதாரண பிரஜைகளுக்குச் சொந்தமாகும்படி

26th August 1961] [Sri R. Krishnasami Naidu]

யான நிலைமையில் சட்டபூர்வமாக எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டிருக்கின்றன. அதன் பின்பும் படிப்படியாக விரிவானதொரு நிலச்சீர்திருத்தச் சட்டத்தைக்கொண்டு வருவதற்கு பேச்சு வார்த்தைகள் நடைபெற்று வந்திருக்கின்றன. இந்தியாவில் நிலச் சீர்திருத்தம் கொண்டுவருவதற்கு இரண்டு நோக்கங்கள் இருந்தன. ஒன்று நிலப்பிரபுக்களிடத்தில் இருந்து நிலம் இல்லாதவர்களுக்கு நிலம் கிடைப்பதற்காக நிலத்தை எடுத்துக் கொள்வது முக்கியமான நோக்கங்களில் ஒன்றாக இருந்தாலும், நில சாகுபடியை எந்தவகையில் அதிகரிப்பது என்பதும் சேர்ந்தே கவனிக்கப்பட்டு வந்திருக்கின்றன. சாகுபடி செய்யும் விவசாயிகளின் நிலைமை என்ன? நிலப்பிரபுக்கள் நிலைமை என்ன? குத்தகைக்காரன் நிலைமை என்ன ? குத்தகை விகிதம் என்ன? என்பனபோன்ற எல்லாப் புள்ளி விவரங்களும் சேகரிக்கப்பட்டிருக்கின்றன.

நிலத்தில் பாடுபடக்கூடியவர்கள், விவசாயத் தொழிலில் ஈடுபட்டு கூலி வேலை செய்யக்கூடியவர்கள் நிலைமை என்ன என்பதைப் பற்றியெல்லாம் ஆராய்ந்து, எந்தத் திட்டத்தின் அடிப்படையில் இந்தச் சட்டத்தை கொண்டுவந்தாலும் இந்தியாவிலுள்ள நிலப் பசியை தீர்ப்பது இதன் மூலம் சாத்தியம் இல்லை என்ற முடிவிற்கு அனைவரும் வந்திருக்கிறார்கள். அது சாத்தியம் என்று யாரும் கூறமாட்டார்கள் என்றுதான் நான் நினைக்கிறேன். அப்படி சொல்ல இயலாது. இயலாததற்கு காரணங்களும் இருக்கின்றன. நிலப் பசியைத் தீர்ப்பதற்கான சாத்தியக் கூறுகள் வேறு நாடுகளில் இருக்கின்றன. ஆனால் நம் நாட்டில் இல்லை. ஆச்சாரிய வினோபா பாவே அவர்களே சொல்லியிருக்கிறார்கள், இந்தியாவிலே தலைக்கு ஒரு எக்கர் நிலம் இருக்கிறதென்று சில வருடங்களுக்கு முன்னால். தலைக்கு ஒரு எக்கர் நிலம் சாகுபடியில் இருக்கிறதா என்றால் சந்தேகமே என்று அவரே குறிப்பிட்டிருக்கிறார்கள். சாகுபடிக்கு தகுதியுள்ள நிலம் தலைக்கு ஒரு எக்கர் என்று வைத்துக் கொண்டாலும் சென்னை ராஜ்யம் சம்பந்தப்பட்ட மட்டில் சாகுபடியாகிக் கொண்டிருக்கிற நிலம் தலைக்கு 36 செண்ட் என்று சில ஆண்டுகளுக்கு முன் சொல்லப்பட்டது. செண்ட் கணக்கில் ஏதாவது வித்தியாசம் இருந்கலாம், ஆனால் அநேகமாக சரியாகத்தான் இருக்கும். அதற்கு புள்ளி விவரம் சேகரித்திருக்கிறார்கள். எனது தொகுதியில் அது சரியாகயிருக்கிறதா என்று பார்த்ததில் 36 செண்ட் கூட இல்லை, 33 தான் இருக்கிறது. அதில், பதக்கு, குறுணி என்றால், குறுணி 2 படி, பதக்கு 4 படி மதறாஸ் மெஷர். விளைகிற இந்த நிலங்களையெல்லாம் சேர்த்துத்தான் சொல்கிறேன். நிலப் பசியைத் தீர்க்க இதை பிரதானமாகக் கொள்ளவில்லை. நமது நாட்டில், சோஷியலிச சமுதாய அமைப்பு ஏற்படவேண்டுமென்று பல ஆண்டுகாலமாக சொல்லப்பட்டு வருகிறது. அந்த அமைப்பு ஏற்பட ஆசைகளை கொஞ்சம் ஒழிக்க வேண்டும். அதில் நிலவுடமை முதல் ஆசையாக இருந்து கொண்டிருக்கிறது. ஆசைகளில், மூவாசை என்று சொல்வார்கள். மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை என்று சொல்வதுண்டு. தொன்றுதொட்டு இவ்வாசைகள் இருந்து வந்திருக்கின்றன. அதில் மண்ணாசை ஒன்று. மண்ணாசை, சாகுபடி செய்வதற்காக மட்டுமல்ல. அவரவர்கள் ஆட்சியில் உட்பட்ட பிரதேசங்கள் விரிவடைந்துகொண்டிருக்கவேண்டும், அவை தரிசானாலும், காடானாலும், மேடானாலும், வனாந்திரமானாலும் பெரிய நிலப்பரப்பை கட்டியாளவேண்டும் என்ற ஆசை ஒவ்வொரு அரசருக்கும் இருந்து வந்திருக்கிறது என்பதை யாரும் மறுக்க முடியாது. "ஆசைக்கோர் அளவில்லை அகிலமெல்லாம் கட்டி ஆளினும் கடல் மீதிலே ஆணை செலவே நினைவர்" என்று சொல்வார்கள். இது, அன்றும் இன்றும் சரியாகத்தான் இருக்கிறது. வேறு மண்டலங்களில் கூட இடம் பார்க்க முடியுமா என்ற யோசனையிருக்கிறது. இப்பொழுதுள்ள விஞ்ஞான முயற்சிகள் வெற்றி பெற்றால் வெளி மண்டலங்களில் கூட இடம் தேடி வைப்பதற்குள்ள ஏற்பாடுகள் என்னவென்பதைப்பற்றிய பேச்சுவார்த்தைகள் மேல் நாடுகளில் பரவலாக நடைபெற்று வருவதை நாம் காண்கிறோம். ஆசை என்பது முதலில் குறைய வேண்டும். இந்த நாட்டிலே கூட மண்ணைக் கட்டி அழுது வந்தவர்களின் சரித்திரம் என்ன ? இரண்டாவது மகா யுத்தம் முடிந்ததற்குப் பின்னர், அதற்கு முன் நிலத்தை

வைத்துக்கொண்டு விவசாயம் செய்து கொண்டிருந்தார்களோ அவர்களின் பூர்வோத்திரங்கள் என்ன ? விவசாயம் எப்படி நடைபெற்று வந்தது ? அவர்கள் சரித்திரம் என்ன ? என்று பார்க்கவேண்டும். விவசாயம் மூலம் முன்னேறியவர்கள், விவசாயத்தை லாபகரமாக, சந்தோஷமாக செய்யக்கூடிய வகையில் இந்நாட்டில் விவசாயம் இருந்ததில்லை. விவசாயம் நாளடைவில்தான் கட்டுபடியாகிக் கொண்டிருக்கிறது. இப்பொழுது விவசாயத்தை நல்லபடி செய்ய வாய்ப்புகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. நாம் திட்டமிட்டு பல காரியங்கள் செய்து வரும் காரணத்தினால். இருந்தும் முன்னைவிட இப்பொழுது நாளுக்குநாள் நிலப்பசி அதிகரித்துக் கொண்டே வருகிறது என்பதை நியாயபுத்தியுள்ள அனைவரும் ஒப்புக் கொள்வர். சிறிய நிலங்களை விலைக்கு கொடுக்கும்போது, அதை விலைக்கு வாங்க யார் யார் போட்டி போட்டுக்கொண்டு வருகிறார்கள் என்று பார்த்தால் பல தலைமுறையாக தங்களுக்கு சொந்தமாக நிலம் இல்லாதவர்கள் வேறு தொழில் செய்து சிறிது சிறிது சம்பாதித்து வைத்துக்கொண்டிருக்கக் கூடியவர்கள் தான் 1 ஏக்கர், ½ ஏக்கர், இரண்டு ஏக்கர் என்று போட்டி போட்டுக்கொண்டு நிலம் வாங்க முன்வருகிறார்கள். இந்த நிலப் பசி பெரிய தனவந்தர்களிடம், வேறு தொழில்களில் ஈடுபட்டு பணம் சம்பாதித்து வைத்திருக்கக் கூடியவர்களிடம் அதிகமாக இருக்கிறதென்று சொல்ல முடியாது. நிலத்தை அதிகமாக வைத்துக் கொண்டிருக்க வேண்டுமென்ற எண்ணம் இப்பொழுது குறைந்து கொண்டு வருகிறது. இன்று அரசாங்கம் இச்சட்டத்தைக் கொண்டுவந்தாலும் இதைப் பற்றி பேச்சுகள், ஆலோசனைகள், பிரச்னைகள் இவையெல்லாம் சில ஆண்டுகளாகவே இருந்து வருகிறது. அதை அனுசரித்து நிலம் வைத்திருப்பவர்கள், சட்டம் எவ்வாறு வரும், எவ்வளவு ஸ்டான்டேர்ட் ஏக்கர் வைத்துக்கொள்ளலாம் என்று சட்டம் வருமோ என்று நினைத்து கை மாற்றம் செய்வதற்குரிய ஏற்பாடுகள் நடந்தது ரகசியமல்ல, அது ஒரு பகிரங்க ரகசியமாகும். ஒரு வரிடமிருந்த நிலம், பரம்பரையாகயிருந்த நிலம், அந்த நிலத்தில் உயிரை வைத்திருந்தவர்கள் அந்த நிலங்களை பிறருக்கு சாஸனம் எழுதிக்கொடுக்கும் விதத்தில் மனமாற்றம் ஏற்பட்டிருக்கிறது. ஒவ்வொருவரும் தங்களது உடமைகளை, இப்பொழுது ஏற்பட்ட உடமையல்ல பன்னெடுங்காலமாகயிருந்த உடைமையை, முன்னோர்கள் தேடி வைத்த உடைமையை அதில் ஆதாரம் இருந்ததோ இல்லையோ அதைக் கட்டி அழுதவர்கள் தங்கள் சொந்தக்காரர்களுக்கோ அல்லது மற்றவர்களுக்கோ கொடுக்கக் கூடிய பெரியதொரு மனமாற்றம் இந்தச் சட்டத்தினால் ஏற்பட்டிருக்கிறது. சொந்தக்காரர்களுக்கு மட்டுமல்ல, பல ஜில்லாக்களில் பார்க்கிறோம் பலர் தங்களது பண்ணையாட்களாயிருந்தவர்களுக்கும், பக்கத்து கிராமங்களிலுள்ள ஏழை எளியவர்களுக்கும்கூட ஏக்கர் ஒன்று ரூபாய் 2,000 ரூபாய் பெறுமானால் அவர்கள் கையிலிருக்கும் 500 ரூபாயையோ அல்லது 1,000 ரூபாயையோ முதலில் வாங்கி விட்டு மீதியுள்ளதற்கு ஆதாரம் எழுதி வாங்கி நிலத்தைக் கொடுத்தவர்கள் பலர். நான் அவர்களுக்கு வக்காலத்து வாங்கிப் பேசுகிறேன் என்று யாரும் நினைக்க வேண்டியதில்லை. என் நான்கு மக்களில் மூவருக்கு ஆறு ஏக்கர் வீதம்தான் கொடுத்திருக்கிறேன். ஒரு மகனுக்கு நிலமே இல்லை. ஆக, நான் யாருக்காகவும் வக்காலத்து வாங்கிப் பேசுவதாக நினைக்க வேண்டாம். இந்த சட்டம் வருவதின் காரணமாக மக்களிடம் ஒரு மனமாற்றம் ஏற்பட்டிருக்கிறது. சோஷியலிஸ் சமுதாய அமைப்பு ஏற்பட இத்தகைய மனமாற்றம் பிரதானமாக எல்லோரிடமும் ஏற்படவேண்டும். அத்தகைய மனமாற்றம் ஏற்பட்டால்தான் எதிர்காலத்தில் பொருளாதாரத் துறையிலும் ஏற்படக் கூடிய பெரிய மாறுதல்கள், இன்னும் பல்வேறு மாறுதல்கள் ஏற்படுகிறபோது இப்பொழுது ஏற்படக்கூடிய மனமாற்றம் மன ஒப்புதல் ஒரு பக்குவ நிலையை ஏற்படுத்தும் என்பதை நாம் மறுக்கமுடியாது. ஆக, இந்தச் சட்டம் மூலம் நல்லதொரு மனமாற்றம் ஏற்பட்டு நிலங்களை பலர் மாற்றிக் கொடுத்திருக்கிறார்கள். 30 ஸ்டான்டர்ட் ஏக்கர் அளவில் இருக்கக்கூடியவர்கள் அவ்வாறு கொடுக்கவில்லை. நிலத்தை வைத்திருப்பவர்களிடமிருந்து இந்தச் சட்டம் மூலம் வரும் நிலத்தை எடுத்து நிலம் தேவையாகயிருக்கக் கூடியவர்களுக்கு நிலத்தில் உழைக்கக் கூடியவர்கள் அத்தனை பேர்

26th August 1961] [Sri R. Krishnasami Naidu]

களுக்கும் கொடுத்துவிடமுடியும் என்று எதிர்பார்ப்பது சாத்தியமா? ஒன்று வேண்டுமானால் வைத்துக்கொள்வோம். இந்தக் கணக்கைத் தெரிந்து கொள்ளுகிற முறையில், இந்தியாவிலுள்ள நிலம் பூராவும் எவ்விதம் இருக்கிறது அதை எவ்விதமெல்லாம் பிரிக்க முடியும் என்ற அளவில் ஆராய்ந்து பார்க்கக்கூடிய வகையில் இந்தச் சட்டம் பயன்பட்டது என்று சொன்னால் அதில் என்ன தப்பு இருக்கிறது? அனுபவத்தை வைத்துக் கொண்டு மொத்தம் எவ்வளவு நிலம் இருக்கிறது என்பதையும் நாம் சிந்தித்துப்பார்க்கவேண்டும். இப்போதுள்ள நிலைமை நமக்கு நன்றாகத் தெரிகிறது. இரண்டு மூன்று வருட காலமாக நம்முடைய நாட்டின் நிலைமை என்ன? இதை வைத்துக்கொண்டு நம்மால் எதைச் செய்ய முடியும் என்பதையும் நாம் ஆலோசித்துக்கொண்டிருக்கிறோம். இந்த நிலைமையில் இந்தச் சட்ட சம்பந்தப்பட்ட வரையில் ஏதோ நிலச்சொந்தக் காரர்கள் மட்டும் அவர்களுக்கு சாதகமாக பல மாறுதல்களை செய்து விட்டார்கள், அதற்கு தகுந்த முறையில் இந்தச் சட்டம் இடம் கொடுத்து விட்டது என்ற முறையில் பேசுவது பொருத்தமாகாது. இந்தக் காரணத் தைக்கொண்டாவது அவர்கள் வேறு ஆட்களுக்கு மாற்றிக்கொடுத்திருக்கி றார்களா இல்லையா? அவர்களுக்கும் தங்கள் நிலத்தை மாற்றிக்கொடுக்கக் கூடிய உரிமை இருக்கக்கூடாதா? அதன் காரணமாக சிலர் நிலம் பெற்றிருக்கிறார்கள் அல்லவா? அவர்களும் இந்த நாட்டின் பிரைஜகள் தானே? தனிமனிதன் சட்டப்படி நடந்து கொள்வதில் என்ன தப்பு இருக்கிறது? அதில் என்ன குற்றம் நடந்து விட்டது? இதையெல்லாம் நாம் யோசித்துப்பார்க்கவேண்டும். இந்தச் சட்டத்திற்கு உட்பட்ட முறை யில் நடந்து கொள்வதில் என்ன தப்பு இருக்கிறது? இதை ஏன் குறை சொல்லவேண்டும் என்று என்னால் புரிந்து கொள்ளவே முடிய வில்லை. ஆகவே தப்பாக எதையாவது நினைத்து இவ்விதம் சொல்ல வேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன். அவர்களும் தங்கள் நிலத்தை பிறருக்கு மாற்றிக்கொடுக்க முன் வருகிறார்கள். ஒரு சோஷியலிஸ சமு தாயம் உருவாக வேண்டும் என்று நாம் எல்லாம் நினைக்கிறோம். இப் போது நிலத்தில் இந்த உச்சவரம்பை கொண்டு வந்திருக்கிறோம். இனி மேல் எதில் எல்லாம் மாறுதல்கள் வரும் என்பதை நாம் இப்போது எப்படி சொல்ல முடியும்? அடுத்த தலை முறையிலுள்ளவர்களின் எண் ணங்கள் எவ்வாறு உருவாகுமோ? யார் கண்டார்கள். ஆகவே இந்த நிலைமையில் இந்தச் சட்டம் நியாயமான வகையில் செய்யப்பட்டிருக்கிறது. பல சீர்திருத்தங்களை இந்தச் சட்டம் கொண்டு வந்திருக்கிறது. 1959-லோ அல்லது 1960-லோ விவசாய வருமானத்தின் மீது வரி விதிக்கவேண்டும் என்பதற்காக ஒரு கணக்கு எடுத்தார்கள். ஜில்லா வாரியாக இத்தனை ரூபாய்க்கு மேல் வரி செலுத்தக்கூடியவர்கள் இத்தனை பேர்கள் இருக்கி றார்கள் என்று கணக்கு எடுத்தார்கள். இந்தக்கணக்கு, புள்ளிவிவரங் கள் எல்லாம் அடங்கிய பிரசுரத்தை சில மாதங்களுக்கு முன்பு நம் மிடத்தில் கொடுத்திருக்கிறார்கள். 30 ஸ்டான்டர்ட் ஏக்கருக்கு மேல் வைத்திருக்கக்கூடியவர்கள் ஜில்லா வாரியாக இத்தனை பேர்கள் இருக்கி றார்கள் என்று கணக்கு கொடுத்திருக்கிறார்கள். அதில், 9,671 பேர்கள் தான் 30 ஸ்டான்டர்ட் ஏக்கர்களுக்கு மேல் வைத்திருக்கக் கூடியவர்கள் இருக்கிறார்கள் என்று ஜில்லா வாரியாக கொடுத்திருக்கிறார்கள். இதில் அதிகமான பேர்கள் இருப்பது தஞ்சாவூர், இரண்டாவது கோயம்புத்தூர், மூன்றாவது தென்னாற்காடு, நான்காவது மதுரை, ஐந்தாவது திருச்சி, ஆறாவது ராமனாதபுரம், ஏழாவது திருநெல்வேலி என்று ஒவ்வொரு ஜில்லாவையும் சொல்லி கடைசியாக எட்டாவது நீலகிரியை சொல்லி யிருக்கிறது. கன்னியாகுமரி அப்போது சேரவில்லையோ என்னவோ அது மட்டும் இதில் சேர்க்கப்படவில்லை. இந்தப் பிரசுரத்தின் மூலமாக தெரி வது என்னவென்றால், மொத்தம் 5 லட்சத்தி 72 ஆயிரத்தி 235 ஏக்கரில் 1 லட்சத்தி 70 ஆயிரம் ஏக்கர் குத்தகைக்காகத்தான் விடப்பட்டிருக்கின்றன. இவ்விதம் குத்தகைதாரர்களாக இருக்கிறவர்களுக்கு சில பாதுகாப்புகள் கொடுத்திருக்கிறோம். பல பரிகாரங்களை ஏற்படுத்தியிருக்கிறோம். இவ்வி தம் குத்தகை வாரம் பயிரிடுபவர்களை மட்டும், அதிலும் தஞ்சாவூர் ஜில்லா வில் அவர்கள் அதிகமாக இருக்கிறார்கள், அவர்களை மட்டும் கவனத்தில் எடுத்துக்கொண்டு நிலம் இல்லாதவர்கள் அதிகமாக இருக்கிறார்கள் என்று

சொல்வது சரியல்ல. நிலம் இல்லாதவர்கள் என்ற முறையில் எல்லா ஜில்லாக்களிலும் பலர் பாட்டாளிகளாகவே கஷ்டப்பட்டுக்கொண்டு இருக்கக் கூடிய நிலையில் எவ்வளவோ பேர்கள் என்பது உண்மை. ஆனால் நம்முடைய ராஜ்யத்தைப் பொறுத்தவரையில் நில உடைமையை சட்ட பூர்வமாக குறைப்பது என்கின்ற முயற்சியை எடுத்துக்கொள்ளும் போது இதன் பலன் என்ன ஆகும் என்பதை நாம் பார்க்கவேண்டும். இன்று நம்முடைய அமைச்சர் அவர்கள் இதை கொண்டு வந்ததின் பின்னால் இதற்கு வேறு வேறு காரணங்களை கற்பித்து, இந்த சர்க்காரும் சர்க்காரைச் சேர்ந்தவர்களும், தங்கள் இஷ்டம் போல் மாற்றிக்கொண்டார்கள் என்றெல்லாம் சமயத்திற்குத் தகுந்தாற்போல் சொல்வதில் எந்தவிதமான அர்த்தமும் இல்லை. ஒரு சில வருஷங்களாக இதைப்பற்றி சிந்தித்து முடிவு செய்திருக்கிறோம். இன்று திடீரென்று கொண்டு வந்து விடவில்லை. சிலர் வேண்டுமென்றால் இப்பொது 30 ஏக்கர் என்றிருப்பதை 20 ஏக்கர் என்றோ அல்லது 15 ஏக்கர் அல்லது 10 ஏக்கர் என்றோ இருக்கலாம் என்று சொல்லலாம். சொல்லுவது என்னவென்டுமானாலும் சொல்லலாம். ஆனால் செய்வதுதான் கஷ்டம். இப்போதுள்ள சட்டப்படி எல்லோரும் நிலச் சொந்தக்காரர்களாக மாறுகிறார்கள் என்பதையும் நாம் ஞாபகத்தில் கொள்ள வேண்டும். நிலம் இல்லாதவர்கள் இந்த நாட்டிலேயே இல்லை என்று சொல்லிவிட முடியாது. இதனால் குறைபடுகின்றவர்களும் இருக்கத்தான் செய்வார்கள். எதில்தான் குறை இல்லாமல் இருக்க முடியும்? இப்போது நாம் நிர்ணயித்திருக்கிறபடி 30 ஏக்கர் என்பது அதிகமாகிவிட்டதா என்பதை நாம் யோசித்துப்பார்க்க வேண்டும். உண்மையில் இது மிகவும் அதிகம் என்று சொல்லிவிட முடியாது. ஒரு நியாயமான முடிவைத்தான் செய்திருக்கிறோம். எல்லா தரப்பினரும், இந்த சட்டமன்றத்தில் இருக்கிறவர்களின் கருத்துக்கள் படி நல்ல முறையில் ஒரு மாறுதலை செய்திருக்கிறோம். இம்மாதிரியான சட்டம் வரும்போது நாம் சந்தோஷப்பட வேண்டும். நம்முடைய நாட்டினுடைய வழக்கத்திற்கு தகுந்த வழிவகைகள் வகுக்கப்பட்டிருக்கிறது அதற்குத் தகுந்த முறையில் அஸ்திவாரம் போடப்பட்டிருக்கிறது. இதில், பல குறைகளை காணும்போது கட்சிக் கண்ணோட்டத்தில் பலவிதமான எண்ணங்களை நம் மனதில் வைத்துக்கொள்ள வேண்டிய அவசியமில்லை. பெரியதொரு மாறுதலை ஏற்படுத்தப்போகிறோம், நல்லதொரு ஏற்பாடு இது, இதில் மனதிற்கு பிடிக்காத கசந்த வார்த்தைகளை சொல்ல வேண்டாம். அதில் எந்தவிதமான லாபமும் ஏற்படப்போவதில்லை. சர்க்காரை ஏமாற்றிவிட்டார்கள் என்று சொல்லப்பட்டது. அவ்விதம் இல்லை என்பதற்கான காரணங்களை நான் முன்பே சொன்னேன். குத்தகைதாரர்களை வெளியேற்றிவிடுவார்கள் என்று சொல்லப்பட்டது. நிலச் சொந்தக்காரர்தான் சொந்தமாக பயிரிடுவதற்காக ஐந்து ஏக்கர்களை எடுத்துக் கொள்ளலாம் என்று சொல்லியிருப்பது என்ன தவறு? அது என்ன நியாயத்தை மீறி செய்து விட்டார்கள்? ஏதோ சர்க்காரின் உத்தியோகத்தில் இருந்தாலும் பின்னால் நிலத்தை சொந்தமாக வைத்துக்கொள்ளக் கூடாது என்றிருக்கிறதா? கனம் பழனிசாமி அவர்கள் சர்க்கார் அதிகாரிகளைப்பற்றியும் டாக்டர்களைப்பற்றியும் சொன்னார்கள். சர்க்கார் டாக்டர்களைப் பற்றி சொன்னார்களோ அல்லது யாரைக் குறிப்பிட்டு சொன்னார்களோ தெரியவில்லை. அவர்கள் வேறு எத்தகைய தொழிலில் ஈடுபட்டிருந்தாலும் அவர்களுக்கு சொந்த சாகுபடிக்கு நிலம் கொடுக்கவேண்டும்,
1-00 p.m. பாதுகாப்பு அளிக்கவேண்டும். இது நியாயமில்லையா? மனதிலே எதையோ எதையோ வைத்துக்கொண்டு வேறு விதமாக பேசுவது பொறுத்தமாகாது. 5 ஏக்கர் தான் சொந்த சாகுபடிக்கு எடுத்துக்கொள்ளலாம் என்ற சரியான முடிவை செலக் கமிட்டி செய்திருக்கிறது. நாம் அதை ஒப்புக்கொள்ள வேண்டும் என்று நினைக்கிறேன்.

வேறு ராஜ்யங்களை சுட்டிக்காட்டுகிறார்கள். அந்தந்த ராஜ்யங்களின நிலைமைக்கு தகுந்தபடி, சூழ்நிலைக்கு தகுந்தபடி பொது மக்களின் கருத்துக்கு தகுந்தபடி இசைந்து அவர்கள் சட்டத்தை செய்திருக்கலாம் ஆகையினால் "அது மாதிரி இங்கே இருக்கிறது, இது மாதிரி அங்கே இருக்கிறது" என்றெல்லாம் சொல்லுவதில் என்ன பயன்? இதிலே ஒருவரைப் பார்த்துக் காபபி

26th August 1961][Sri R. Krishnasami Naidu]

அடிப்பது என்பது முடியாது. ஒரு வைத்தியர் வியாதியஸ்தனுக்கு நேர்வாள மாத்திரை கொடுத்தனுப்பினார். அவருக்கு ஒரு மகன் இருந்தார். அந்த நோயாளி மாத்திரை சாப்பிட்டுவிட்டு வந்து, அது உபயோககரமாக இருந்தது, சீக்கு குணமாகிவிட்டது என்று வைத்தியரிடம் வந்து சொன்னான். அப்பொழுது வைத்தியருடைய மகனும் அதைக் கேட்டுக் கொண்டிருந்தான். ஆனால், வைத்தியர் மகனுக்கு வைத்தியம் தெரியாது. இன்னொரு சந்தர்ப்பத்தில் வேறு ஒரு வியாதியஸ்தர் வந்தபொழுது, அவருக்கு வைத்தியர் மகன் நேர்வாள மாத்திரை கொடுத்தால் நிலைமை என்ன ஆகும்? எந்த சீக்குக்கு நேர்வாள மாத்திரை கொடுக்க வேண்டுமென்று வைத்தியம் தெரியாமலே நேர்வாள மாத்திரை கொடுத்தால் என்ன ஆகும்? அதைப் போல் வேறு ராஜ்யங்களில் என்ன செய்கிறார்களோ, அதைப் போல் நம் ராஜ்யத்திலும் செய்யவேண்டுமென்பது பொருத்தமாகாது. அந்தந்த ராஜ்யத்தில் இருக்கும் சூழ்நிலைக்குத் தகுந்தபடி, நிலைமைக்கு தகுந்தபடி மக்களுடைய மனக்கருத்திற்கு இசைந்து எது சாத்தியமோ, எது சாத்தியமில்லையோ, அதையெல்லாம் மனதில் கொண்டு அவரவர்கள் அந்தந்தக் காரியங்களைச் செய்திருக்கலாம். எல்லா ராஜ்யங்களையும் சுட்டிக்காட்டும்பொழுது சமீப காலத்திற்கு முன்பாக வெகுநாள்வரையில் நம் ராஜ்யத்தோடு சேர்ந்திருந்த ஆந்திரா ராஜ்யத்தை சுட்டிக்காட்டமாட்டேன் என்கிறார்கள் ஏனோ புரியவில்லை. தொலைவில், தூரத்தில் இருக்கிற மற்ற ராஜ்யங்களை சுட்டிக்காட்டுபவர்கள் ஆந்திரா ராஜ்யத்தை மட்டும் சுட்டிக்காட்டாதது அது அவர்களுடைய வாதத்திற்கு பொருத்தமில்லை என்ற காரணத்தினால்தான் என்று நினைக்கிறேன். ஆந்திர ராஜ்யத்தில் நிலப்பரப்பு எவ்வளவு? நம்முடைய ராஜ்யத்தில் 50,000 சதுரமைல் இருக்கலாம் என்று நினைக்கிறேன். அது சரியோ, தப்போ தெரியவில்லை. ஆந்திர மகாணத்தில் ஒரு லட்சம் சதுரமைலுக்கு அதிகமான நிலப்பரப்பு உள்ளது என்று எண்ணுகிறேன். ஆந்திர மாகாணம் செய்வதற்கும், நாம் செய்வதற்கும் வித்தியாசம் இருக்கத்தான் செய்யும். அங்கு இருக்கும் நிலப்பரப்பிற்கு தகுந்தபடி, சூழ்நிலைக்குத் தகுந்தபடி அவர்கள் செய்திருப்பார்கள். அது எப்படி தமிழ் நாட்டிற்கு பொருந்தும்? நாம் நம்முடைய ராஜ்யத்தில் எது சாத்தியமோ, எதைச் செய்ய முடியுமோ, எது நியாயமோ அந்த முறையில் சட்டம் செய்கிறோம்.

அடுத்தபடியாக, சர்க்கரை ஆலைகளைப் பொறுத்தமட்டில் விதிவிலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. ஒன்றும் அநியாயமாகச் செய்துவிடவில்லை. அதில் ஏதாவது தகராறு ஏற்பட்டால் பின்னால் திருத்தம் செய்துகொள்ளலாம். ஒரு சர்க்கரை ஆலை என்றால் கிட்டத்தட்ட ஒருகோடி அல்லது 1½ கோடி ரூபாய் மூலதனம் போடப்படுகிறது. கிட்டத்தட்ட ஒரு கோடி ரூபாய் அதில் சர்க்கார் மூலதனம் போடுகிறார்கள். ஒரு சர்க்கரை ஆலை ஒரு இடத்தில் நடக்க வேண்டுமானால் குறைந்தபட்சம் 5,000 ஏக்கர் கரும்பு சாகுபடி செய்யவேண்டும். ஒரு வருஷத்தில் 200 நாட்களுக்கு மேலாக அந்த சர்க்கரை ஆலை வேலை செய்தாகவேண்டும். 5,000 ஏக்கர்கூட போதாது. 6,000 ஏக்கர் வேண்டியிருக்கும். இந்தியாவிலேயே சர்க்கரை பற்றுக்குறையை தீர்ப்பதற்கு வேண்டி பல இடங்களில் கோடிக்கணக்கில் ரூபாய் முதலீடு செய்யப்பட்டு சர்க்கரை ஆலைகள் வேலை செய்வதற்கு வாய்ப்பு அளிக்கப்பட்டிருக்கிறது. அப்படியிருக்கும்பொழுது கரும்பு கிடைப்பதற்கு பல ஏக்கரா நிலங்கள் ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கும்பொழுது அதில் இப்பொழுது தலை இட்டால் நிலைமை என்ன ஆகும் என்பதை யோசித்துப் பார்க்கவேண்டும். அந்த வகையில் தான் ஆலோசனை செய்து சர்க்கரை ஆலைகள் சம்பந்தமான நிலங்களுக்கு விதிவிலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. இது நியாயமானதே. அதே மாதிரிதான் கூட்டுறவு பண்ணைகளும் வளம் பெறாத நிலங்களை கூட்டுறவுப் பண்ணையில் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று அதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. அந்த நிலத்தில் இப்பொழுது கை வைத்தால், அந்த முயற்சி என்ன ஆகும்? கூட்டுறவு சாகுபடி நாட்டிற்கு நன்மை பயக்கும். சட்டசபை அங்கத்தினர்களிடையே அதில் கருத்துவேறுபாடு இல்லை. அந்த முயற்சி சரியான உரு பெற்றுக்கொண்டிருக்கும்பொழுது, அதில் இருக்கக்கூடிய நிலத்தை இந்த ஏற்பாட்டின் கீழ் கொண்டுவந்தால், அந்த

வளர்ச்சிக்கு குந்தகம் விளைவிக்கும் என்பதை மனதில் கொண்டுதான் காரியங்களைச் செய்திருக்கிறோம். அதிக சாகுபடி செய்தால் அதிகமாகக் கொடுக்கவேண்டுமென்ற எண்ணம் சாகுபடிசெய்பவர்களிடையே ஏற்பட்டிருக்கிறது. உண்மையை மறந்து, அந்த வாதம் தங்களுக்கு அனுகூலமாக இருக்கிறது என்று கனம் அங்கத்தினர் ஸ்ரீ என். கே. பழனிசுவாமி மனதில் அந்த மாதிரி பட்டிருக்கிறது என்று நினைக்கிறேன். ஒரு ஏகரில் 100 மரக்கால் விளைந்தால் சாகுபடியாளர் தான் 60 மரக்கால் எடுத்துக் கொள்கிறார், நிலச்சொந்தக்காரருக்கு 40 மரக்கால் கொடுக்கிறார். 200 மரக்கால் விளைந்தால் அவருக்கு 120 மரக்கால் கிடைக்கிறது, நிலச்சொந்தக் காரருக்கு 80 மரக்கால் கொடுக்கிறார். அதிகமாக விளைந்தால், 60 மரக்கால் கிடைப்பதற்கு பதிலாக சாகுபடியாளருக்கு 120 மரக்கால் கிடைக்கவில்லையா? இதில் உண்மை இல்லையா? நியாயம் இல்லையா? அப்படியிருக்கும் பொழுது அதிக சாகுபடி செய்தால் சொந்தக்காரருக்கு கொடுக்கவேண்டியிருக்கிறது என்று மனதில் நினைத்துக்கொள்ளுவதா? அதிக சாகுபடிசெய்தால் சாகுபடியாளர்களுக்கும் அதிகமாக கிடைப்பதற்கு இடம் இல்லையா? அவருக்கு அப்படி பேசிப்பேசி பழக்கம். சாகுபடியாளர் எலும்பும், தோலும் தெரியும்படியாக உழைத்து உழைத்து சொந்தக்காரர்களுக்கு கொடுக்கிறார், அவர்களுக்கு என்ன ஆதாயம் இருக்கிறது என்றெல்லாம் பேசிப் பேசி உண்மையை மறந்தே விட்டிருக்கிறார். உண்மையை மறக்காமல் விவசாயம் செய்வதிலே அவர்களுக்கு ஊக்கம் அதிகரிப்பதற்கு ஏற்பாடுகள் செய்வதற்குப் பதிலாக, நாட்டில் விவசாய உற்பத்தியை பெருக்குவதற்குப் பதிலாக, இம்மாதிரி பேச்சிலேயே பழக்கமாகிவிட்டது. அது நியாயமான வாதம் அல்ல என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந்த மசோதாவை எந்த வகையிலே நாம் பார்தாலும்கூட, பொறுக்கு கமிட்டி நன்றாக பரிசீலனை செய்து, பல்வேறு ஸ்தாபனங்களையும் கலந்து ஆலோசித்து, அவர்களுடைய கருத்துகளையெல்லாம் திரட்டி ஆராய்ந்து பார்த்து நான் பொறுக்குக் கமிட்டியில் இல்லையென்றாலும் அவர்கள் அவைகளையெல்லாம் மனதில் வைத்துக்கொண்டு நியாயமான ஏற்பாடுகளைச் செய்திருக்கிறார்கள்.

(Deputy Speaker in the Chair.)

இன்னொன்றுகூட சொல்லலாம் வாதத்திற்கு. ஒருவேளை எப்ரலுக்கு முன்னால் சட்டம் வந்திருந்தால் சொல்லியிருப்பார்களோ என்னவோ? கோவில்கள், மடாலயங்களுக்கு சொந்தமான நிலங்களுக்கு விதி விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. அது நியாயம் இல்லை என்று சொல்லலாம். அம்மாதிரி நில விஸ்தீர்ணம் தமிழ் நாடு பூராவும் இருக்கிறதாக வைத்துக் கொண்டு நாம் ஒரு முடிவுக்கு வருவது சரியல்ல. தமிழ் நாட்டில் இருக்கக் கூடிய இம்மாதிரி நிலங்கள் சம்பந்தப்பட்ட மட்டிலே 200 ஸ்டான்டேர்டு ஏகராவுக்கு அதிகமாக இருக்கக்கூடிய ஸ்தாபனங்கள் 81 என்று சொல்லப் பட்டிருக்கிறது. அதிலே மடங்கள் 5 தான். அதற்குச் சொந்தமான நிலங்கள் 46,547 ஏக்கர். தஞ்சாவூரில் 35,000 ஏக்கர் இருக்கிறது (Deputy Speaker in the Chair) திருநெல்வேலியில் 4,000 ஏக்கர் இருக்கிறது. வேறு ஜில்லாவில் எங்கே இருக்கிறது? கோவில்களுக்கும், மடாலயங்களுக்கும் சொந்தமான நிலங்கள் பரவலாக இருக்கிறதாக நாடு முழுவதும் விரிந்து கிடக்கிறமாதிரி ஒரு மனப்பான்மையை நிலம் இல்லாதவர்களுடைய மனதில் ஏற்படுத்தும் வகையில் சிலர் பேசிக்கொண்டிருக்கிறார்கள். அது சரியல்ல. உண்மையில் எந்த சமயத்தில், எந்த நிலையில், எந்தக்காலத்தில், எப்படி ஏற்பட்டது அதற்கு நியாயமான வழிவகைகள் செய்வதற்கான மார்க்கங்கள் என்ன? கோவில்கள், மடாலயங்களுக்குச் சொந்தமான நிலங்கள் சமுதாயத்திற்கு பயன்படும்படியான வகையில் என்னென்ன காரியங்களை, நிர்வாக முயர்ச்சிகளை செய்யவேண்டுமோ அதையெல்லாம் அரசாங்கம் கவனிக்கவேண்டும்,

(மணி அடிக்கப்பட்டது)

இன்னும் ஒரு நிமிஷம் அவகாசம் கொடுக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

**DEPUTY SPEAKER :** The hon. member may continue.

26th August 1961]

SRI R. KRISHNASAMI NAIDU : சிறிது காலத்திற்குப் பின் இப்பொழுது செய்துள்ள ஏற்பாடுகளைவிட இன்னும் சிறந்த ஏற்பாடுகள் செய்யமுடியும் அம்மாதிரி செய்யவேண்டிய அவசியம் நேரலாம். அதற்கான காரியங்கள் செய்வதற்கான யோசனைகளும் நம் மனதில் இருந்துகொண்டிருக்கின்றன. நில உடமைக்கு உச்ச வரம்பு கட்டும் இந்த மசோதா பல விஷயங்களை மனதில்கொண்டு, எதிர்காலத்தையும் மனதில்கொண்டு, சமுதாயத்தில் உள்ள எல்லா தரப்பினர்களுக்கும் நியாயமான ஒரு மனச்சாந்தி ஏற்படக்கூடிய வகையில் அமைந்திருக்கிறது. இந்தமசோதாவை முழுமனதுடன் வரவேற்று, நான் என்னுடைய பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

SRI D. S. AUTHIMOOLAM : மிஸ்டர் டெப்யூடி ஸ்பீக்கர் ஸார், இந்த மசோதாவை பொதுவாக ஒரு "டெட் லெட்டர்" என்று சொல்லலாம். இப்பொழுது நாட்டிலே 1952-வது ஆண்டு தேர்தலுக்குப் பிறகு புதியதாக ஒரு பாடம் படித்திருக்கிறார்கள். நிலம் இல்லாதவர்களுக்கு ஏதோ நிலம் கொடுக்கிறோம். நாங்கள் ஒரு பெரிய சோஷலிஸ கர்த்தாக்கள். அப்படியே வானத்திலிருந்து நாங்கள் இங்கே இறங்கியிருக்கிறோம். சுயராஜ்யம் எங்கள் கையில் தான் இருக்கிறது. நாங்கள் சோஷலிஸ பாணி சர்க்காரை நடத்துகிறோம் என்றெல்லாம் சொல்லிக்கொள்ளுகிறார்கள். சோஷலிஸத்தையே புரட்டிவிட்டதாக ஒரு ஐதீகம்.

SRI R. KRISHNASAMI NAIDU : "வானத்திலிருந்து" என்று சொல்லுகிறார்கள். அப்படியென்றால் என்ன ? பேசும் வார்த்தைகளுக்கு அர்த்தம் வேண்டும்.

SRI D. S. AUTHIMOOLAM : அப்படியென்று எல்லோருக்கும் எண்ணம். எல்லாம் ஓட்டுப்பிடிக்க ஒரு காரியமே தவிர வேறு ஒன்றுமில்லை. வாஸ்தவத்திலே, நிலச் சீர்த்திருத்தம் இந்திய சர்க்காரும், ப்ளானிங் கமிஷனும் கொண்டுவரவேண்டுமென்று செய்கிறார்கள். இங்கே சட்டம் கொண்டு வரும்போது என்ன சொல்கிறார்கள் ? ஆப்ஜக்ட்ஸ் அண்ட் ரீஸன்ஸ் படி பார்த்தால், இந்த சட்டத்தைக் கொண்டு வருவதால், மேலும் விவசாய உற்பத்தியை நாட்டில் பெருக்குவது தான் நோக்கம் என்று போட்டிருக்கிறார்கள். அதுதான் முக்கியமான கருத்துக்களில் ஒன்று. ப்ளானிங் கமிஷன் ரிப்போர்ட்டிலிருந்து, எல்லா காங்கிரஸ் அறிக்கைகளிலும் இருக்கிறது. ஆனால், விவசாயத்தை, அதிக உற்பத்தி பண்ண இந்த நிலத்தை இப்படிச் செய்வதுதானா முறை ? ஆட்டைத் தூக்கி குட்டியில் போடுவது, குட்டியைத் தூக்கி ஆட்டில் போடுவது, அதைப் பண்ணி இதைப் பண்ணி காரியங்கள் செய்தால்தான் நடக்குமா ? வேறு முறைகள் இல்லையா ? அதைப் பற்றி இந்திய சர்க்கார் பரிசீலித்ததா ? இல்லவே இல்லை.

இன்றைக்கு இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டுவிட்டன. மூன்றாவது திட்டம் ரூ. 11,000 கோடியில் வகுக்கப்பட்டிருக்கிறது. எங்கே உங்களால் உரம் சப்ளை செய்ய முடிந்ததா ? இந்த தேசத்தின் மொத்த வருமானத்தில் 40 பர்செண்ட், நாஷனல் இன்கம், விவசாயத்திலிருந்து கிடைக்கிறது. விவசாயத்திலிருந்து நாஷனல் இன்கமை அபிவிருத்தி செய்து ஏராளமான தொழிற்சாலைகளை ஏற்படுத்தி, ஏழை எளிய மக்களுக்கு எல்லாம், கோடிக்கணக்கானவர்களுக்கு வேலைவாய்ப்புகள் கொடுத்திருக்கலாமே. அதற்கான வழிவகைகளை எங்கே செய்தார்கள் ? விவசாய அபிவிருத்தி என்று சொல்லும்போது, அதற்கு அத்யாவசியமாக வேண்டிய உரம் உங்களால் சப்ளை செய்ய முடிகிறதா ? நீங்கள் சோஷலிஸம் பேசுகிறீர்கள். எங்கே பணக்காரர்கள் சரியாக இன்கம் டாக்ஸைக் கட்டுகிறார்கள்? வருடம் ஒன்றுக்கு 100 கோடி ரூபாய் அளவுக்கு கணக்கை ஏமாற்றுகிறார்கள். பெயர்களைச் சொல்லக்கூடாது. சட்ட சபையில் பெயர் சொல்லுவது சரியல்ல. ரூ. 100 கோடி வரிப்பணத்தை வசூல் செய்ய முடியாத முறையில் கணக்குகள் மறைக்கப்படுகின்றன. என்னிடம் ஒருவர் கேட்டார்: "என்னைய்யா,"—நான் இன்னும் சுதந்தராக் கட்சியில் சேரவில்லை—"சுதந்தராக் கட்சியில் பணக்காரர்கள் இருக்கிறார்கள் என்று சொல்லுகிறார்களே. சுதந்தராக் கட்சியில் அதிகப் பணக்காரர்களா அல்லது காங்கிரஸ் கட்சியில் அதிகப் பணக்காரர்கள் இருக்கிறார்களா" என்று கேட்டார். நான் சொன்னேன், "சாமர்த்தியமுள்ள முதலாளிகள் காங்கிரஸ் கட்சியில்

இருப்பார்கள், அப்பாவி முதலாளிகள் சுதந்தரா கட்சியில் இருப்பார்கள்'' என்று. அர்த்தத்தை நீங்களே புரிந்து கொள்ளுங்கள். ஒரு ஆங்கில மேதாவி, இன்கம் டாக்ஸ் வருமானம் வசூலிப்பதை சரியான முறையில் பரிசீலனை செய்தால் பல கோடி ரூபாய்கள் அதிகமாக வரும் என்று 5, 6 வருஷங்களுக்கு முன்பே ஒரு ரிப்போர்ட் சமர்ப்பித்தார். வருஷம் ஒன்றுக்கு 100 கோடி ரூபாய் வசூல் செய்யலாம். நீங்கள் என்ன செய்தீர்கள் ? முதலாளிகளுக்குச் சாதகமாக எல்லாம் செய்கிறீர்கள். அவ்வளவு தான். ஆனால், சோஷலிஸம், சோஷலிஸம் என்று பேசுகிறார்கள். இருந்தாலும் மூன்று எக்கர்தான் நிலம் என்கிறார்கள். 5 எக்கருக்கு மேல் வைத்திருப்பவன் இந்த நாட்டில் திருடன். நாங்கள் திருடனைப் பிடிக்கிறோம் என்கிறார்கள். இந்த மாதிரி ஒரு சட்ட மன்றம் செய்வது சரியா ? நிலங்களை எடுத்துக்கொண்டால், நிலமில்லாதவர்களுக்குக் கொடுத்தால் ரொம்ப சந்தோஷம். நானும் அதை வரவேற்கிறேன். அதே நேரத்திலே, கண்ணை மூடிக்கொண்டு செய்யும் காரியங்களைச் செய்கிறார்கள். எத்தனை விவசாயக் குடும்பங்கள் பட்டினியாலும், பசியாலும், வாடுகின்றன. டெனன்ட்ஸ் ப்ரொடெக்ஷன் ஆக்ட், அந்த ஆக்ட், இந்த ஆக்ட் என்று போட்டு சிறு நிலச்சுவான்தார்களையெல்லாம் வாட்டுகிறார்கள். இந்த ஐந்து வருஷமாக அவர்களை எவ்வளவு தொந்தரவுக்குள்ளாக்கி விட்டார்கள் ? இவர்கள் வோட்டர்களிடம் தப்பிவிடலாம். ஆனால், மேலே ஒருவன் இருக்கிறான். (சிரிப்பு) அவனுக்கு பயந்துதான் ஆகவேண்டும். நடுத்தர விவசாயிகளுக்கு சலுகை செய்திருக்கிறார்களா ? மூன்று எக்காரா பயிர் செய்யலாம் என்று ரொம்பக் கருணை கூர்ந்து, சர்க்கார் சட்டத்திலே சீர்த்திருத்தம் செய்திருக்கிறார்கள். இந்த மூன்று வருஷ காலமாக சில குடும்பங்களில் பட்டினி பசியால் தற்கொலையும் செய்துக் கொண்டிருக்கிறார்கள். இவ்வளவு காலமாக அதைச் செய்கிறோம், இதைச் செய்கிறோம் என்று சொல்லிவிட்டு, இன்றைக்கு மூன்று எக்கரா என்றால், இவர்கள் என்ன பிச்சை கொடுக்கிறார்களா ? ப்ளானிங் கமிஷன் மெம்பர் ஒருவருக்கு சம்பளம் என்ன ? அதைப் பேசக்கூடாது என்றால், இங்குள்ள அமைச்சர்களுக்குச் சம்பளம் என்ன ? சோஷலிஸம் பேசுகிறார்கள். இவர்கள் என்ன இங்கிலாந்தில், ஜர்மனியில் கடன் வாங்கவில்லையா ? ஏதோ புதிதாக ஏதோ ஒரு வித்தையைக்கண்டு பிடித்து விட்டதுபோல் பேசுகிறார்கள். இந்த சட்டத்தின் மூலம் எந்த ஏழை எளிய மக்கள் பயன் அடையப் போகிறார்கள் ? எவன்தான் 3 எக்கரா பயிர் செய்து வாழமுடியும் ? ஒரு குடும்பத்திற்கு குறைந்தது 5 அல்லது 10 எக்கராவாவது வேண்டும்.

அடுத்தபடியாக, காம்பன்சேஷன். அதை பத்திரமாகக் கொடுப்போம். ரொக்கமாகக் கொடுப்போம் என்கிறார்கள். நிலத்தைப் பிடுங்கிக்கொள்ளும் போது, பாடு படும் மக்களுக்கு நியாயமான பணத்தைப் பகிர்ந்து கொடுக்க வேண்டியது தானே. நிலத்தை எடுத்துக்கொண்டால், விலை கொடுக்க தாமதம் எதற்கு ? மோட்டார் ட்ரான்ஸ்போர்ட்டை இன்றைக்கு நாஷனலைஸ் பண்ணுங்கள் என்றால், செய்யவில்லை. ஏன் என்று கேட்டால், ரொம்பப் பணம் வேண்டும், சர்க்கார் முதலீடு செய்யமுடியவில்லை என்கிறார்கள். அதே நேரத்தில், நிலச்சுவான்தார்களிடம் நிலங்களைப் பிடுங்கிக் கொண்டால், பணத்தைக் கொடுக்க வேண்டும். காம்பன்சேஷனில், 12 மடங்கு என்றெல்லாம் சொல்லுகிறார்கள், அப்புறம் ஏதோ 5,000 என்கிறார்கள். இப்படியெல்லாம் ஒரு ஸிஸ்டம் போட்டிருக்கிறார்கள். நியாயமாகச் செய்ய வேண்டுமென்றால், மார்க்கெட் வால்யூ ஏன் கொடுக்கவில்லை. நம் நாட்டில் எங்கு பார்த்தாலும் ப்ளாக் மார்க்கெட்; அப்படிப் பத்திரத்திலும் உண்டு. ஒரு எக்கர் ரூ. 6,000 பெறும் என்றால், பத்திரத்தில் ரூ. 3,000 என்று போட்டுவிட்டு ரெஜிஸ்டர் செய்வார்கள். ஆகவே, அதையெல்லாம் விட்டு விட்டு, மார்க்கெட் வால்யூ என்ன என்று ஆபீசர்களைப் போட்டு விசாரித்து, அந்தத் தொகையை ஒழுங்காகக் கொடுக்க வேண்டும். ஆகவே, காம்பென்சேஷன் விஷயத்தில், சிறு நிலச் சுவான்தார்கள் விஷயத்தில், வோட்டு வாங்கும் கண்ணோட்டத்தோடு, கம்யூனிஸ்ட் கட்சிக்கும் பயந்து இம்மாதிரியெல்லாம் செய்யாதீர்கள். நியாயத்திற்குப் பயப்படுங்கள். வோட்டுக்காக சிறு நிலச்சுவான்தார்களை அந்தரத்தில் விடாதீர்கள். சட்டத்தைக்கொண்டு வந்து அந்தரத்திற்கு அவர்களைத் தள்ளாதீர்கள்.

26th August 1961] [Sri D. S. Authimoolam]

எவ்வளவோ எக்சம்ஷன்களெல்லாம் கொடுத்திருக்கிறார்கள். இப்பொழுது கனம் கிருஷ்ணசாமி நாயுடு 5 லட்சம் ஏக்கரா சர்ப்ளஸ் என்று ஏதோ ஒரு புத்தகத்தைப் படித்துக் காண்பித்தார்கள். ஜீவநதிகள் உள்ள கிருஷ்ணா, கோதாவரி, துங்கபத்ரா முதலிய பெரிய நதிகள் பாயும் ஆந்திராவிலேயே $1\frac{1}{4}$ லட்சம் ஏக்கர் தான் சர்ப்ளஸ் லாண்டுகள் என்கிறார்கள். அப்படித் தகவல் தெரிகிறது. தமிழ்நாட்டில் அதைவிடக் குறைவாகத் தான் இருக்கும். அதை எத்தனை பேருக்குக் கொடுப்பார்கள்? அதையெல்லாம் எப்படி டிஸ்ட்ரிபூட் பண்ணப் போகிறார்கள். எப்பொழுது பார்த்தாலும் ப்ளான், ப்ளான் என்று பேசிப் பேசி இந்த நாட்டில் குழப்பத்தை உண்டாக்குகிறார்கள்.

1962 எலெக்ஷனில் தப்பி விடலாம். ஆனால்,இந்த சட்டத்தின் மூலம் புதிய நன்மை என்ன விளையப்போகிறது? வீண் குழப்பந்தான் உண்டாகும். இது எப்படியிருக்கிறது என்றால், "டிவைட் அண்ட் ரூல் பாலிஸி" போல், வெள்ளைக்காரன் வைத்திருந்தானே அதுபோல் தான் இருக்கிறது. நியாயமான ஒரு அடிப்படையில் செய்ய வேண்டும். (சிரிப்பு) சிரித்து மழுப்பாதீர்கள். அங்கே காங்கிரஸ் கொரடா சிரித்து மழுப்பப் பார்க்கிறார். ஆகவே, இந்த நாட்டில் பெரிய மிராசுதார்களை என்ன வேண்டுமானாலும் செய்யுங்கள், ஆட்சேபணையில்லை. ஆகவே, 5 ஏக்கர் நிலம் அல்லது பத்து ஏக்கர் நிலம் உள்ளவன் சொந்த சாகுபடிக்கு செய்யலாம் என்று வையுங்கள் எத்தனையோ விவசாயிகள் வேலையில்லாமல் சர்க்காரில் மோதுகிறார்கள். சர்க்காரில் நீங்கள் விரலை அசைக்கிறீர்களா? பயிர் செய்வதற்கு லாயக்கான "ஏரபிள் லாண்ட்ஸ்" எத்தனை லட்சம் ஏக்கர் தமிழ் நாட்டில் இருக்கிறது என்று கணக்கெடுத்திருக்கிறீர்களா? அதுமாதிரி எங்காவது கொடுத்து முயற்சி செய்தீர்களா? கூட்டுறவுப் பண்ணைகளை அமைக்க ஏற்பாடு செய்தீர்களா? ஒன்றும் செய்யாமல் ஏதோ மேலே முந்தவாரியாக, நுனிப் புல் மேய்ந்துகொண்டு, வெள்ளைக்கார ஆட்சியில் இருந்த சட்டத்தை வைத்துக்கொண்டு நேரத்தைப் போக்கிக்கொண்டுபோவது மாதிரி இருக்கிறதே தவிர, முயற்சி எடுத்து, எக்ஸ்பெரிமெண்டலாக ஏதாவது செய்திருக்கிறீர்களா என்றால், இல்லையென்று சொல்லவேண்டியிருக்கிறது. அமெரிக்காவிலுள்ள போர்டு பவுண்டேஷன் சொன்னார்கள் என்று பைலட் ஸ்கிம் போட்டீர்கள். நீங்கள் நிலச் சீர்திருத்தம் கொண்டு வருவதற்கு முன்னால் "கல்டிவபிள் லாண்ட்ஸ்" நம் நாட்டில் எவ்வளவு இருக்கிறது, அதை ஏழைகளுக்கு எந்த முறையில் விநியோகம் செய்வது என்று கணக்கெடுத்தீர்களா? 1962 தேர்தல் வரப் போகிறது. அப்பொழுது விதிகள் "ப்ரேம்" பண்ணிக்கொண்டிருக்கிறோம் என்று சொல்வீர்கள். கடைசியில் என்ன ஆகும்? 1967-ல் அவர்கள் நாமத்தைச் சாத்திவிடுவார்கள். சர்க்காரில் இருக்கும் உங்களுக்கு மனம் சுத்தம் இல்லை. மனம் சுத்தமாக இருந்தால் தான் காரியம் சித்தியாகும். வக்கீல் கதையொன்று உண்டு. ஏழை ஒருவன் ஒருவரிடம் கடன் பட்டிருந்தான். அதை அவன் திருப்பிக்கொடுக்க முடியவில்லை. அவன் ஒரு வக்கீலைப் பார்த்து தன் நிலையைச் சொன்னான். அவர் ஒரு உபாயம் சொல்லிக் கொடுத்தார். கோர்ட்டில் என்ன கேட்டாலும், "பே பே" என்று சொல்லும் படியாக உபாயம் சொல்லிக்கொடுத்தார். அவர் சொன்னபடியே, கோர்ட்டில் எதிர் வக்கீல் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் "பே பே" என்று சொன்னதால், கேஸ் அறைகுறையாக அனுகூலம் ஆய்விட்டது. பிறகு வீட்டுக்கு வந்ததும் வக்கீல் தம்முடைய "பீஸ்" கேட்டார். அதற்கும் அவன் "பே பே" என்றான். (சிரிப்பு). அதுபோல், 1962-ல் கேஸ் நடத்துவீர்கள். "பீஸ்" 1967-ல் கேட்பீர்கள். அப்பொழுது மக்கள் "பே பே" என்று சொல்லத்தான் போகிறார்கள். (சிரிப்பு).,

ஆகவே, இப்பொழுது நீங்கள் சிறு நிலச் சுவான்தார்கள் விஷயத்தில் முக்கியமாக நல்ல கண்ணியத்தோடு நடந்துகொள்ள வேண்டும். தருமத்துடன் நீங்கள் நடந்துகொள்ள வேண்டும். தரும சிந்தனை என்பது நாளடைவில் குறைந்துகொண்டே போனால், இந்தத் தேசத்தில் பல கஷ்டங்கள் உண்டாகிவிடும். ஆளும் கட்சியில் இருப்பவர்கள், அரசாட்சியில் இருக்கின்றவர்கள் அதை ரொம்பப் பாதுகாக்கக் கடமைப்பட்டவர்கள். ஆகவே நீங்கள்

சிறு நிலச் சுவான்தார்கள் விஷயத்தில் தாராளமான மனப்பான்மையில் இருந்து, பத்து ஏக்கர் வரையில் அவர்கள் சாகுபடி செய்துகொள்ளலாம் என்ற உரிமையை அவர்களுக்கு வழங்கவேண்டும். மற்றபடி உத்தியோகஸ்தர்கள் வெளியூர்களிலிருந்து ரிடையராகி ஊருக்கு வந்தால், அவர்கள் 3 ஏக்கருக்கு மேல் பயிர்செய்ய முடியாது என்று சட்டத்தில் இருப்பது பெரிய கோளாறாக இருக்கிறது. விவசாய டெபுடி டைரக்டர் ஒருவர் வேலையிலிருந்து ஓய்வு பெற்று கிராமத்திற்குத் திரும்பி பென்ஷன் வாங்கிக் கொண்டு இருக்கிறார் என்று வைத்துக்கொள்வோம். அவர் ஊரிலேயே அவர் 3 ஏக்கர் வைத்துக்கொண்டு பார்த்துக்கொண்டு இருக்கவேண்டுமா என்று கேட்கிறேன். அவர் பெற்ற விவசாய அனுபவத்தை வைத்துக் கொண்டு பத்து ஏக்கர் வரையில் சாகுபடி செய்யக்கூடாதா என்று கேட்கிறேன். அவர் நிறைய சாகுபடி செய்வது இந்தத் தேசப் பொருளாதாரத்தை விருத்தி செய்யாதா ? இப்படிப்பட்ட வகையில் சொந்த சாகுபடி செய்வதற்குப் பத்து ஏக்கர் வரையில் தாராளமாக அனுமதிக்கவேண்டும்.

நஷ்ட ஈடு தரும்போது, அதை உடனடியாகவும் ரொக்கமாகவும் செலுத்திவிடவேண்டும். மார்க்கெட் வால்யூ கொடுக்கவேண்டும். இந்த நாட்டிலுள்ள ஏழை எளிய மக்களுக்கு சர்க்காரிலுள்ள நிலத்தையும் சேர்த்து நல்ல முறையில் பட்டுவாடா செய்யவேண்டும். சர்க்கார் நிலம் எவ்வளவு இருக்கிறது என்பதற்குப் புள்ளி விவரம் தயார் செய்யவேண்டும். இந்த மசோதாவில் இன்னும் நிறைய ஓட்டைகள் இருக்கின்றன. இவ்வளவு பேசினது போதுமென்று நினைக்கிறேன். நல்ல மாட்டுக்கு ஒரு சூடு தானே. இந்த முறையில் நான் சொன்னதைக் கவனத்தில் கொண்டு எல்லோரும் நியாயத்தோடு நடந்துகொள்ள வேண்டும். வோட்டு ஒன்றையே குறிக்கோளாக வைக்கக்கூடாது. மகாத்மா காந்தி சத்தியத்தினால் சுயராஜ்யம் வாங்கினார். ஜில்லாவுக்கு மூன்று பேர் ஆகஸ்டு தியாகி இருந்ததை வைத்து சுயராஜ்யம் வரவில்லை. தயவு செய்து இதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள். தருமம்தான் தலைகாக்கும் என்று சொல்லி வணக்கத்துடன் என் உரையை நிறுத்திக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER: There are five more minutes. Shall we adjourn now?

HON. MEMBERS: Yes, Sir.

DEPUTY SPEAKER: The House will now adjourn and meet again at 8-30 a.m. on Monday, the 28th August 1961.

The House then adjourned.

## V.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### 1–25 p.m. A. Statutory Rules and Orders.

339. *Notification issued with G.O. Ms. No. 2464, Home, dated 20th July 1961 exempting from payment of motor vehicles tax leviable in respect of the car MSW 3156 belonging to the Trade Commissioner of Trade Representation of Czechoslovak Socialist Republic, Madras Branch. [Laid on the table of the House under section 11 (2) of the Madras Vehicles Taxation Act 1931 (Madras Act III of 1931).]*

### B. Reports, Notifications and other papers.

184. *Review of the working of the Excise and Prohibition Department for the first half year 1960 commencing from 1st April to 30th September 1960.*

26th August 1961]

185. *Notification issued with G.O. Ms. No. 4432, Industries, Labour and Co-operation (Industries), dated 7th July 1961 amending Rule 1 of the Madras Pawnbrokers Rule 1944 under section 22 of the Madras Pawnbrokers Act, 1943 (Madras Act XXII of 1943).*

186. *Thirteenth Report (Second Assembly) of the Committee on Estimates (1960–61) on the Harijan Welfare Department.*

187. *Fourteenth Report (Second Assembly) of the Committee on Subordinate Legislation.*



